
Snazzy cap
Multi - Band Radio inside


Parry's
COFFY BITE


Parry's
COFFY BITE
Madcap
CONTEST


PIRANHA


ACTIVE


CADET HX


YANKEE


ROBO COP

# Heroes start early.

Ride, race, take a tumble or even take a fall.

Because it's never too early to be a hero.



# கோல்கொண்டா கோட்டை

## ஹைதராபாத்



கோல்கொண்டாவில் தினமும் நடைபெறும் 'ஒலி-ஒளி' நிகழ்ச்சியில் அமிதாப்பச்சனின் வெண்குலக் குரலில் கோல்கொண்டா அரசின் பெருமையையும் குதுப்ஷாஹி வம்ச ஆட்சி பற்றியும் கேட்கலாம்.

தேவகிரியை ஆண்ட யாதவர்கள் கி.பி.1183ல் கோல்கொண்டாக் கோட்டையைக் கட்டினார்கள். கோல்கொண்டா என்ற பெயர் ஆடு மேய்ப்போர் மலை எனப் பொருள்படும் 'கொல்ல கொண்டா' என்பதிலிருந்து ஏற்பட்டது. பிறகு இக்கோட்டை காகதீயர்கள், பாமினி வம்ச சிற்றரசன் குவலி சுல்தான் வசமாகி கி.பி.1518ல் சுதந்திர நாடாக தெலுங்கானா பகுதியில் அமைந்தது.

பிறகு இதனை நான்கு தலைமுறைகளாக ஆண்ட குதுப்ஷாஹி வம்சத்துக் கடைசி மன்னன் தனது மகன் ஜாம்ஷெட்டால் 99 வயதில் கொலை செய்யப்பட்டான்.

ஜாம்ஷெட்டின் சகோதரன் இப்ராஹிம் நாட்டை விட்டு ஓடி விஜயநகர சாம்ராஜ்யத்தில் தஞ்சம் புகுந்தான். ஏழு ஆண்டுகளுக்குப் பின் ஜாம்ஷெட் இறந்ததும் இப்ராஹிம் நாட்டிற்குத் திரும்பி வந்து மன்னன் ஆனான். விஜயநகரில் இப்ராஹிம் ஓர் இந்து அரசகுமாரியை மணந்து கொண்டான். அவன் இந்துக்களின் கலைகளிலும் பண்பாடு களிலும் பெரிதும் ஆர்வம் கொண்டான். அவன் 30 ஆண்டுகள் ஆண்டபின் கி.பி.1580ல் மரணமடை யவே, அவனது மகன் முகம்மது குவலி தனது 15வது வயதில் பதவியேற்று 33 ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். தனது ஆட்சியில் அவன் ஹைதராபாத்



நகரை அமைத்து, அதைச் சுற்றி ஏரிகளையும் பூங்காக்களையும் ஏற்படுத்தினான்.

இந்த கோல்கொண்டாவில் தான் பத்ராசல ராமபிரானின் பக்தரான 'ராமதாஸ்' சிறையில் அடைக்கப்பட்டார். கான்சர்லா கோபண்ணா என்பது அவரது இயற்பெயர். வரி வசூலிக்கும் அதிகாரியான அவர், தாம் வசூலித்த வரியை ராமர் கோயில் கட்டுவதில் செலவு செய்துவிட்டார்! பணத்தைக் கையாடினார் என்று குற்றம் சாட்டப் பட்டு, சிறையில் அடைக்கப்பட்டார். ஆனால் ராமபிரான், நாட்டை ஆண்ட சுல்தான் அபுல் ஹசனின் கனவில் தோன்றி, 'ராமதாஸ்' பணம் செலுத்திவிட்டதற்கான ரசீதைக் காட்ட, சுல்தான் கோபண்ணாவை விடுதலை செய்து பத்ராசல ராமர் கோயிலுக்கு மானியங்களையும் ஆபரணங் களையும் அளித்தான்.

குதுப்ஷாஹி மன்னர்கள் கலைகளை ஆதரித்து, இசை, நடனக் கலைஞர்களை ஊக்குவித்தார்கள். உருது, பாரசீக மொழிகளுக்கு அளித்த அதே ஆதரவை தெலுங்கு மொழிக்குக் கொடுத்தார்கள். கி.பி.1687 வரை குதுப்ஷாஹி வம்சம் ஆட்சியில் இருந்தது. அதை நிறுவியவர் கொலை செய்யப் பட்டது போல, அந்த வம்சக் கடைசி மன்னனான அபுல்ஹசன் என்ற தானாஷாஹும் சதி, துரோகச் செயல்களால் கொலை செய்யப்பட்டார்.

கோல்கொண்டா கோட்டை உறுதியானது. எதிரி களால் எளிதில் கைப்பற்ற முடியாதது. ஆனால் முகலாயச் சக்கரவர்த்தி ஔரங்கசீப் அதனை எட்டு மாதங்கள் முற்றுகையிட்டு சதி செய்து, லஞ்சம் கொடுத்து, துரோகிகளின் உதவியால் கைப்பற்றிவிட்டான். தானாஷாஹ் பிடிபட்டு சிறையில் அடைக்கப்பட்டு கொல்லப்பட்டான். இவ்வாறு தக்காணத்தில் புகழ்பெற்ற ஓர் அரசு அழிந்தது.

நம் நாட்டிலேயே சிறந்ததாகக் கருதப்படும் கோல்கொண்டா கோட்டையில் ஆந்திரப் பிரதேச சுற்றுலாத் துறை, கோல்கொண்டாவின் பொற் காலத்தை அமிதாப்பச்சனின் குரலில் ஒலி-ஒளி நிகழ்ச்சியாக அளித்து வருகிறது. இதில் கோல் கொண்டாவின் எழுச்சி, வளர்ச்சி, தாழ்வு ஆகியவை வர்ணிக்கப்பட்டுள்ளது.







ANDHRA PRADESH TOURISM DEVELOPMENT CORPORATION

For Round the Clock Tourist Information on A.P.
Dial: **1901-334033 from Hyderabad / Secunderabad & 0901-334033 from other places in India.**

**Central Reservation Offices at: Hyderabad:** Opp. BRKR Bhavan, Tank Bund Road, Ph: 040-3453036, 3450165 Fax: 040-3453086; **Secunderabad:** Yatrinivas Complex, S.P. Road, Ph: 040-7893100, 7816375; **Tirupati:** T.P. Area, Beside Venkateswara Bus Station, Ph: 08574-55385, 55386, Mobile: 98480-07033; Fax: 08574-56877; **Tirumala:** 08574-70055; **Nellore:** H.NO.24, I/1613, 1st floor, Opp. Kasturba Kalakshetram, Police Office Road, Dargha Mitta. Ph: 0861-306089; **Vijayawada:** Hotel Ilapuram Complex, Gandhi Nagar, Ph: 0866-570255, 523966; **Visakhapatnam:** LIC Building, Daba Garden, Ph:0891-746446, Fax:713135; **Kurnool:** APTDC Divisional Office, C/D-6, C-Camp, Nandyal Road, Telefax: 08518-70104; **Nagarjunasagar:** 08680-77364, 76540; **Srisailam:** 08524-88311; **Warangal:** 08712-459201, 446606; **Chennai:** +91(44)5381213; **Bangalore:** +91(80) 2383361/2383362; Fax:+91(80)2383363




இந்தியப் புராதனக் கதைகள் 25


ஆசிரியர் விளக்கம் 19


மர்மக்குளம் 11


விநாயகர் 45

# பொருளடக்கம்






SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
*இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900*
*இந்தியாவிற்குள் ரூ 120*
**புக்போஸ்டில்**
*உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.*

இப்பத்திரிகையில் விளம்பரங்களை வெளியிடத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:
**சென்னை**
Ph : 044-234 7384
234 7399
**e-mail : advertisements @chandamama.org**
**டில்லி**
மோனா பாட்டியா
Ph : 011-651 5111
656 5513/656 5516
**மும்பை**
ஷகீல் முல்லா
Mobile : 98203-02880
Ph : 022-266 1599
266 1946/265 3057



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# பண்டிகைகளின் போதனை

மீண்டும் பண்டிகைக் காலம் வந்துவிட்டது. பண்டிகைகளின்போதும் விழாக்களின்போதும் வீடுகளில் உறவினர்கள் ஒன்று கூடுகிறார்கள். சமுதாய மக்கள் சாதி, இன, நிற வேறுபாடின்றி ஒன்று திரண்டு ஆடிப் பாடி மகிழ்கிறார்கள். இது ஒற்றுமைக்குத் தான் அடிகோலுகிறது.

இது போன்ற சமயங்களில் பிறரது பயங்கரத் தாக்குதலை எதிர்த்து நம் உயிர்களைக் காத்தவர்களை நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டாமா? ஆம். அத்தகைய தாக்குதல்கள் தமது குறுகிய நோக்கால் சற்றும் மனிதாபி மானம் இல்லாமல் வன்முறையில் ஈடுபடும் ஒரு சிலரால் செய்யப் படுவதே. இத்தகைய விபரீதச் செயல்களால் ஒரு குடும்பம் ஒருவரையோ அல்லது அதற்கு மேலோ இழந்து பரிதவிக்கிறது. ஏனெனில் அவர்கள் அக் குடும்பத்திற்காக உழைத்துப் பணம் சம்பாதித்துக் கொண்டு வருபவர்களாக இருக்கலாம். வன்முறை மனிதர்கள் மீது மட்டுமல்ல, இயற்கையின் மற்ற உயிரினங்கள் மீதும் நடக்கிறது. மிருகங்களின் மீதும் பறவைகளின் மீதும் தான்.

அக்டோபரில் நாம் காந்திஜீயின் பிறந்த நாளைக் கொண்டாடுகிறோம். 'ஏழைகள் நாட்டைத் தமது என உணர்ந்து அவர்களும் நாட்டின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடும் நிலையை ஏற்படுத்த வேண்டும். இந்தியாவில் உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற பாகுபாடு இல்லாமல் எல்லோரும் அன்பும், பாசமும் கொண்டு வாழ வேண்டும்' இதுதான் நம் தேசத் தந்தையான காந்திஜீயின் எதிர்பார்ப்பு.

பண்டிகைகள் நமக்கு இம்மாதிரி நல்லிணக்கத்தை போதிக்கின்றன என்பதை நாம் புரிந்து கொண்டுவிட்டால் நம் வாழ்க்கை இனிதாக அமைந்துவிடும்.

---

ஆசிரியர் : **விஸ்வம்**
Visit us at : http://www.chandamama.org







# இந்தியத் துணைக் குடியரசுத் தலைவர்

ராஜஸ்தானின் முன்னாள் முதலமைச்சரான பைரோன் சிங் ஷேகாவத் தற்போது இந்தியாவின் துணைக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். இவர் மூன்று முறைகளாக 12 ஆண்டு காலம் ராஜஸ்தான் மாநிலத்தின் முதலமைச்சராக இருந்திருக்கிறார். இவர் தமக்கு எதிராக நின்ற சுசீல் குமார் ஷிண்டேயைவிட 149 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி பெற்றார். இவர்களுக்கு வாக்களித்த 788 பேர்கள் நாடாளுமன்றத்தின் மக்களவை உறுப்பினர்களும் மாநிலங்களவை உறுப்பினர்களும் மட்டுமே ஆவர்.



திரு. ஷேகாவத் 1923 அக்டோபர் 23ல் ராஜஸ்தானிலுள்ள சிகார் மாவட்ட கிராமம் ஒன்றில் பிறந்தவர். இவர் தம் உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்த பின் அரசியலில் ஈடுபட்டார்.

ஜனசங்கம் என்ற கட்சியில் சேர்ந்து 1952ல் நடந்த முதல் சட்டமன்றத் தேர்தலில் தத்தாராம்கட் தொகுதியில் நின்று வெற்றி பெற்றார். 1957ல் நடந்த அடுத்த சட்டமன்றத் தேர்தலில் சிரிமாதோபூர் தொகுதியில் நின்று வெற்றி பெற்றார். ஐந்து ஆண்டுகளுக்கு பின் கிசன்போல் தொகுதியில் வெற்றி பெற்று அதற்கு அடுத்தும் 1967ல் அதே தொகுதியில் வெற்றி பெற்றார்.

1977ல் ஜனதா கட்சியின் சார்பில் சாப்டா தொகுதியில் வெற்றி பெற்றார். 1980ல் பாரதீய ஜனதா கட்சி வேட்பாளராக அதே தொகுதியில் வெற்றி பெற்றார்.

இதன் பிறகு 1985, 1990, 1993 ஆண்டுகளில் நடந்த தேர்தல்களில் பாரதீய ஜனதாக் கட்சி வேட்பாளராக முறையே நிம்பதா, டோல்பூர், பாலி ஆகிய தொகுதிகளில் நின்று வெற்றி பெற்றார். 1977, 1990, 1993 ஆண்டுகளில் இவர் ராஜஸ்தான் மாநில முதலமைச்சராக இருந்து மக்களின் அன்பிற்கும் பாத்திரமானார். 1998 வரை இவர் அம்மாநில முதலமைச்சராக இருந்தார். தேசிய அளவில் அரசியலில் பங்கேற்க அவர் விரும்பாமலேயே இருந்து வந்தார். தன் மாநிலத்தில் பாரதீய ஜனதாக் கட்சியின் தலைவர் என்ற திருப்தியுடன் இவர் இருக்கலானார். இவர் எப்போதும் எதிர்க்கட்சி உறுப்பினர்களுடன் சுமுகமான உறவே கொண்டிருந்தார்.

தேசிய ஜனநாயகக் கூட்டணி மிகவும் வற்புறுத்தி துணைக் குடியரசுத் தலைவர் பதவிக்கு இவரை வேட்பாளராக நிறுத்தியது. கூட்டணியின் கட்சிகள் அனைத்துமே இவருக்கு ஆதரவு அளித்தன. துணைக் குடியரசுத் தலைவர் என்ற பதவியோடு நாடாளுமன்றத்தின் மாநிலங்களவைத் தலைவர் பதவியையும் இவர் வகிக்கிறார்.

லட்சக்கணக்கான 'அம்புலிமாமா' வாசகர்களின் சார்பில் நாம் துணைக் குடியரசுத் தலைவர் திரு. பைரோன்சிங் ஷேகாவத்தை வரவேற்று நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பாதாமும் சந்தனமும்...

# சின்டுவின் விருப்பம்












கடந்த 80 ஆண்டுகளாக
சந்தனத்தின் நற்குணத்தை உங்கள்
இல்லத்திற்குக் கொண்டு வருகிறது
**மைசூர் சாண்டல் சோப் நிறுவனம்**








# அரக்கு பள்ளத்தாக்கு

அடுத்த முறை நீங்கள் மலைவாசத் தலம் எதற்காவது போக நினைக்கும் போது ஆந்திரப் பிரதேசத்து அரக்கு பள்ளத்தாக்கில் சில நாட்கள் கழிப் பதை நினைவில் கொள்ளுங்கள். இந்த அரக்குப் பள்ளத்தாக்கு அழகான அமைதியான இடம். இது கிழக் குத் தொடர்ச்சி மலையில் விசாகப் பட்டணத்திலிருந்து 11 கி.மீ. தொலைவில் 975 மீட்டர் உயரத் தில் உள்ளது. இங்குள்ள ஜில்டா நீர்வீழ்ச்சியில் எப்போதும் நீர் உள்ளது. இது மலைவாசிகள் வாழும் பகுதி. நன்கு பராமரிக் கப்பட்டு வரும் இப்பகுதி சில்லென்ற தட்பவெப்பநிலை யுடன் அழகிய இயற்கைக் காட்சிகளைக் கொண்டது. சுற்று லாப் பயணிகள் இங்கு சற்று தங்கிச் செல்ல ஏற்றதாக உள்ளது.



அரக்கு பள்ளத்தாக்கின் மலைவாசிகள், அப்பகுதியின் சந்தைகளில் புளி, தேன், துடைப்பம் போன்றவற்றை விற்றுக் கொண்டிருப்பதைக் காணலாம். தங்களுக்குத் தேவைப்படும் பொருள்களை அவர்கள் அங்கு வாங்கிக் கொள்கிறார்கள்.

அரக்கு பள்ளத்தாக்கிலுள்ள போர்ரா குகைகள் சுற்றுலாப் பயணிகளைப் பெரிதும் கவர்கின்றன. இவை பல்லாயிரம் ஆண்டுகள் பழமையானவை. இவற்றருகே டைடாவின் 'ஜங்கிள் பெல்ஸ்' இயற்கை முகாமும் உள்ளது. அரக்கிலுள்ள அருங்காட்சியகத்தில் இப்பகுதி மலைவாசிகளின் வாழ்க்கைத் தொடர்பான பலவித ஆடைகள், ஆபரணங்கள், கலையம்சப் பொருள்கள் ஆகியவற்றைக் காணலாம். இங்கு மலைவாசி களின் மாதிரி கிராமம் ஒன்றும் அமைத்து வைக்கப்பட்டுள்ளது. இப்பள்ளத்தில் பல அபூர்வ மரம், செடி கொடிகளைக் கண்டு ரசித்து நடந்து செல்வது மனதிற்கு ரம்மியமாக இருக்கும்.

## அங்கு எப்படிப் போவது?

விசாகப்பட்டணத்திலிருந்து 112 கி.மீ. தொலைவிலுள்ள அரக்கு பள்ளத்தாக்கை நேர்பாதையிலும், ரயில் வாயிலாகவும் அடையலாம். விசாகப்பட்டணத்திலிருந்து ஒவ்வொரு நாளும் காலையில் கிளம்பி மாலையில் திரும்பி வரும் ரயில் வாயிலாக கிராண்டுல்-கொத்தவலசாவின் அரக்குப் பள்ளத்தாக்கு முனையில் இறங்கலாம்.



# மர்மக் குளம்

## 8

(நீர்வீழ்ச்சியிலிருந்து வெளியே வந்த ஜெயசீலனும் சித்தசாதகனும் ஒரு குள்ளனை பயங்கர மரம் விழுங்குவதிலிருந்து காப்பாற்றினார்கள். அப்போது காட்டுக் கடா பூட்டப்பட்ட தேரில் குள்ளர்களின் ராணி வந்ததை அவர்கள் கண்டார்கள். அவள் தன் கூட்டத்தவரைப் பற்றி அவர்களிடம் சொல்லிக் கொண்டிருக்கையில் ஒரு பயங்கர மிருகம் ஒரு பாறாங்கல்லை எடுத்து அவர்களை நோக்கி எறிந்தது. அப்போது -)

ஜெயசீலனும் சித்தசாதகனும் அந்த பயங்கர உருவத்தைப் பார்த்த போது அதனருகே ஒரு மனிதன் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். அப்போது அந்த பயங்கர உருவம் எறிந்த பாறாங்கல் அவர்களருகே விழுந்தது. ஜெயசீலன் அந்தப் பயங் கர உருவத்தை சங்கிலியால் கட்டிப் பிடித்து நின்ற அந்த மனிதனை உற்றுப் பார்த்தான்.

காட்டுக்கடாத் தேரில் அமர்ந் திருந்த குள்ளர்களின் ராணி பயந்து போனாள். அவளது ஆட்களும் நடு நடுங்கினார்கள். குள்ளர்களின் ராணி ஜெயசீலனிடம், ''மாவீரரே! அந்த மனிதக் குரங்கும் அதனை ஆட்டி வைக்கும் மனிதனும் கடந்த பத்து நாட்களாக எங்களை மிகவும் பய முறுத்தி வருகிறார்கள். எங்கள் குள் ளர் இனத்தில் தாழ்த்தப்பட்டவர் களாகக் கருதப்படும் பிரிவினர் இவர்களது உதவியால் எங்களைத்



தாக்கி வருகிறார்கள்,'' என்றாள்.

அப்போது ஜெயசீலனும், ''கவலைப்படாதே! நானும் இந்த சித்த சாதகனும் உறுதுணையாக இருக்கிறோம். உங்கள் கூட்டம் கடாக் கூட்டம் என அறிகிறோம். உங்கள் எதிரிகளின் கூட்டத்தின் பெயர் என்ன?'' என்று கேட்டான்.

அவளும், ''அதற்கு மொடாக் கூட்டம் என்று பெயர்'' என்னும் போதே சித்த சாதகன், ''அதோ அந்த மனிதக் குரங்கு மறுபடியும் கல்லை எறியப் பார்க்கிறது,'' என்றான். அதற்கு ஜெயசீலன், ''இதற்கெல்லாம் நாம் பயந்தா போய்விடுவோம்? கல்லடி படாமல் நாம் தப்ப முடியும் என்பது அதற்குத் தெரியாது தான். ஏனெனில் அதற்கு மூளை என்பது கிடையாதே!'' என்றான்.

பிறகு குள்ளர்களின் ராணியிடம், ''அந்த மனிதக் குரங்கை அடித்து வீழ்த்த எனக்கு ஒரு வில்லும் அம்புகளும் வேண்டும். அவற்றை வரவழைத்துக் கொடு!'' என்றான்.

ஜெயசீலன் இதைக் கூறியதும் அந்த ராணியின் சேனாதிபதி பயந்து போய் ராணியிடம் ஏதோ சொல்ல வாயெடுத்தான். ஆனால் பிறகு யோசனை செய்து பேசாமல் இருந்து விட்டான்.

அதைக் கவனித்த சித்தசாதகன், ''என்ன சூரப்புலியே! என்னவோ சொல்ல வந்தாயே! அதைச் சொல்லித் தொலை. இப்படி மென்று விழுங்கிக் கொண்டிருந்தால் எப்படித்தான் வீரர்களுக்குத் தலைமை தாங்கிப் போரை நடத்தப் போகிறாயோ?'' என்று கேட்டான்.

அப்போது சேனாதிபதி சித்த சாதகனுக்கு நேரடியாக பதில் சொல்லாமல் ராணியைப் பார்த்து, ''மகாராணி! நாம் வில், அம்புகளைத் தொடுவது இல்லை என்ற கட்டுப்பாட்டுடன் இருக்கிறோம். அவற்றை நாம் பயன்படுத்துவதில்லை என்றாலும், எப்போதாவது உதவும் என்று எண்ணி ஒரு வில்லையும் சில அம்புகளையும் எடுத்து வைத்திருக்கிறேன். அவற்றைக் கொண்டு வந்து கொடுக்கட்டுமா?'' என்று கேட்டான்.

ராணி தன் சேனாதிபதியைச் சுட்டெரித்துவிடுபவள் போலப் பார்த்தாள். அப்போது ஜெயசீலன் குறுக்கிட்டு, ''ராணியே! அந்த வில்லையும் அம்புகளையும் கொண்டு வரச் சொல். அதைக் கொண்டு முதலில்

அந்த மனிதக் குரங்கைக் கொன்று விட்டு, பிறகு அதனை ஆட்டி வைக்கும் மனிதனை அடித்து விரட்டுகிறேன்,'' என்றான். ராணியும் தன் சேனாதிபதியைப் பார்த்துத் தலையை ஆட்டவே, அவனும் அங்கிருந்து சென்றான்.

இச்சமயத்தில் கல்லைத் தூக்கிக் கொண்டு நின்ற மனிதக் குரங்கை அதனைச் சங்கிலியால் பிடித்துக் கொண்டிருந்த மனிதன் தன் கத்தியால் லேசாகக் குத்தினான். அதனால் கோபத்தோடு அந்த வானரம் அம் மனிதன் மீதே கல்லைப் போடக் கைகளைத் தூக்கியது. அம்மனிதன் தன் கத்தியை அக்குரங்கின் கழுத்தின் மீது வைத்துக் கோபமாக உறுமினான்.

அப்போது ஜெயசீலன், ''ஆ! அந்த மனிதன் யாரென்று தெரிந்துவிட்டது. அவன் என் ஊர்க்காரன். அவன் என் எதிரி. அவனால் தான் நான் ஊர்ஊராக இப்படி அலைந்து கொண்டிருக்கிறேன். அவன் எமது மன்னர் ருத்திரசேனரிடம் குதிரைப் படைத் தலைவனாக இருந்தவன். அவனது பெயர் கிருபாணஜித்தன்,'' என்றான்.

இதே நேரத்தில் வில்லையும் அம்புகளையும் எடுத்துவரச் சென்ற கடாக்குள்ள சேனாதிபதி அவற்றோடு திரும்பி வந்தான். ஜெயசீலன் அவனிடமிருந்து அவற்றை வாங்கிக் கொண்டான்.

சேனாதிபதியும், ''ஐயா! நீங்கள் அம்பை எய்து அந்த மனிதக் குரங்கையும் அதனருகே நிற்கும் மனிதனையும் கொன்றுவிடுங்கள். அவர்




கள் அம்புகளால் அடிபட்டு விழுந்தால் எம் எதிரிகள் பயந்து ஓடிவிடுவார்கள். அப்போது நாங்கள் அவர்களைப் பின்தொடர்ந்து துரத்தி வெகுதூரத்திற்கு விரட்டிவிடுகிறோம்,'' என்றான். சித்தசாதகனும் ''ஜெயசீலா! இந்த சேனாதிபதி கூறுவது போல மனிதக் குரங்கையும் அந்த மனிதனையும் அம்புகளால் அடித்து வீழ்த்து!'' எனக் கூறியவாறே தன் ஈட்டியையும் ஆட்டினான்.

ஜெயசீலனும் ஓர் அம்பை எடுத்து மனிதக் குரங்கிற்குக் குறி வைத்து எய்தான். அந்த அம்பு 'விர்'ரெனப் பாய்ந்து அக்குரங்கின் இடுப்பில் குத்தியது. அது பயங்கரமாகக் கத்தி நிலைதடுமாறி சற்று தூரத்தில் நின்ற குள்ளன் ஒருவனை அலாக்காகத் தூக்கி எறிந்தது. அப்போது கடாக்குள்ளர் சேனாதிபதி எல்லோரையும்



கொஞ்சம் மெதுவாகவே போகச் சொல்! ஏனென்றால் அந்த மனிதக் குரங்கு பாறாங்கல்லை எடுத்து எறிந் தாலும் எறியும்,'' என்றான்.

சேனாதிபதியும் ''நீங்கள் மனிதக் குரங்கையும் அதைப் பிடித்திருக்கும் மனிதனையும் அடக்குங்கள். நாங்கள் எங்கள் எதிரிகளான மொடாக் குள் ளர்களைப் பார்த்துக் கொள்கிறோம்!'' என்றான்.

சித்தசாதகனோ, ''ஓ! நீ சூரப்புலி தான். சொன்னதைச் செய்து காட்டு!'' என்று கூறிச் சிரித்தான். அப்போது மனிதக் குரங்கு ஒரு பெரிய கல்லைத் தூக்கிக் கொண்டு எறியத் தயாராகவே, சித்தசாதகன் ''இந்த வானரத்திற்குக் கல்லைத் தூக்கி எறிவது ஒன்றுதான் தெரியும் போலிருக்கிறது. இதை நான் கவனிக்கிறேன்,'' என்று கூறி ஈட் டியை எடுத்துக் கொண்டு அதனைத் தாக்கச் சென்றான்.

எச்சரித்தான். அவனது வீரர்கள் உடனே மனிதக் குரங்கைத் தாக்க ஓடினார்கள். குள்ளர் சேனாதிபதியும் அவர்களோடு சேர்ந்து விரைந்து சென்றான்.

கடாக் குள்ள வீரர்கள் தம்மைத் தாக்க வருவது கண்டு மொடாக் குள்ள வீரர்களை கிருபாணஜித்தன் எதிர்த் துப் போரிடும்படித் தூண்டினான். அப்போது ஜெயசீலன் சித்தசாதக னிடம், ''நாம் இந்த ராணிக்கு இப் போது உதவி கிருபாணஜித்தனை ஒழிக்க வேண்டும்,'' என்றான்.

சித்தசாதகனும், ''அப்படியே செய்வோம்!'' எனக் கூறவே, அவர் கள் இருவரும் கிருபாணஜித்தன் நின்ற மேட்டை நோக்கி விரைந்து சென்றார்கள். அவர்கள் கடாக் குள்ளர் சேனாதிபதியை அணுகியதும் அவனி டம், ''சேனாதிபதி! உன் ஆட்களை

அதைக் கண்ட ஜெயசீலன், 'இவன் போய் ஏடாகூடமாக எதை யாவது செய்து மாட்டிக் கொள்ளப் போகிறான். இவனைத் தடுத்து நிறுத்துகிறேன்' என்று எண்ணி, ''சாதகா, நீ போகாதே! நான் ஓர் அம்பை எய்து அதை அடித்து வீழ்த்து கிறேன்,'' என்றான்.

அவன் வில்லில் வைத்துவிட்ட அம்பு வானரத்தின் மீது படாமல் கிருபாணஜித்தன் அதனைக் கட்டிப் பிடித்துக் கொண்டிருந்த இரும்புச் சங்கிலி மீது பலமாகப் பட்டது. அதைக் கண்டு கிருபாணஜித்தன் திடுக் கிட்டுத் தலைநிமிர்த்திப் பார்த்தான்.

அம்பை எய்தவன் தன் பரம எதிரி யான ஜெயசீலன் என்பது அவனுக் குத் தெரிந்துவிட்டது.

ஜெயசீலன் அங்கு வருவான் என்று கிருபாணஜித்தன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. அதனால் மொடாக் குள்ளப் படைத் தலை வனிடம், ''இப்போது நாம் எதிரி களை எதிர்க்க வேண்டாம். பேசாமல் பின்வாங்கிப் போய்விடுவதே நல் லது!'' என்றான். மனிதக் குரங்கையும் உடனேயே அங்கிருந்து போகச் சொன்னான்.

அப்போது படைத் தலைவன் ஜெயசீலனையும் சித்தசாதகனை யும் பார்த்துவிட்டு, ''இவர்களைப் பார்த்தா இப்படி ஒரு முடிவு? நீங் களும் இந்த மனிதக் குரங்கும் அங்கு போய் அவர்களை ஒரே அடியில் வீழ்த்தி விடலாமே! அந்த ராணியின் படையை நொடியில் நாங்கள் விரட்டிவிடுவோமே! இப்படி இருக்க நீங்கள் எங்களைப் பின்வாங்கிப் போகச் சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட கிருபாணஜித்தன் அவனை எரித்துவிடுபவன் போலப் பார்த்தான். பிறகு மனிதக் குரங்கை இழுத்தவாறே, ''இதோ பார்! நான் உன் மாதிரி மரமண்டை இல்லை. எல்லாம் யோசித்து ஒருகாரணத்திற் காகத் தான் சொல்கிறேன். அவர் களைத் தாக்கிக் கொல்வதற்கு வேறு வழி இருக்கிறது. அதனால் இப்போது எதுவும் பேசாதே! உடனே கிளம்பு!'' என்றான்.



அதுகேட்டு அப்படைத் தலைவன் தன் ஆட்களுக்குப் பின்வாங்கி ஓடும் படிக் கட்டளை இடவே, அவர்களும் ஓடினார்கள். கிருபாணஜித்தனும் மனிதக் குரங்குடன் தலைதெறிக்க ஓடினான்.

எதிரிகள் ஓடுவதைக் கண்ட ஜெயசீலனும் சித்தசாதகனும் கடாக் குள்ளர் சேனாதிபதியிடம், ''இதுதான் சரியான தருணம். எதிரிகளைத் தாக்கி எவ்வளவு பேர்களைக் கொல்ல முடியுமோ அவ்வளவு பேர்களைக் கொன்றுவிடு!'' என்றார்கள். சேனாதி பதியும் தன் வீரர்களிடம், ''வீரர்களே! எதிரிகளை அடித்து வீழ்த்துங்கள். உம், ஓடுங்கள்!'' என்று முடுக்கி விட்டான்.

அவர்களும் மொடாக் குள்ளர் களையும், கிருபாணஜித்தனையும், மனிதக் குரங்கையும் துரத்திக்



கொண்டு ஓடினார்கள். அவர்கள் பல குள்ளர்களை அடித்து வீழ்த்தியவாறே முன்னேறினார்கள்.

மொட்டாக் குள்ளர்களில் பலர் விழுந்ததைக் கண்ட சித்தசாதகன் உற்சாகத்துடன் உரத்த குரலில், ''உம்! பேஷ்! அப்படித்தான் அடி! குத்து! உதை!'' என்று உற்சாகத்துடன் கத்தினான். பிறகு அவன் ஜெயசீலனிடம், ''நாமும் போய் அந்த கிருபாண ஜித்தனையும் மனிதக் குரங்கையும் தீர்த்துக் கட்டிவிடலாம்,'' என்றான்.

ஜெயசீலன் சித்தசாதகனிடம் ''நாம் அவசரப்படக் கூடாது. நிதானத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்,'' என்று கூறிக் கொண்டிருக்கும்போது கடாக் குள்ளர்களின் சேனாதிபதி வந்து ''நாங்கள் எங்கள் எதிரிகள்ளை விரட்டி விட்டோம். பலரைக் கொன்றும் வீழ்த்திவிட்டோம். இனிமேல் என்ன செய்ய வேண்டும் என்று கூறுங்கள்!'' என்று யோசனை கேட்டான்.

ஜெயசீலனும், ''சரி. இனி உங்கள் ஆட்களை அழைத்துக் கொண்டு உங்கள் இருப்பிடத்திற்குச் செல்லுங்கள். நாங்களும் அங்கே வந்துவிடுகிறோம். அதன் பிறகு நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி யோசிப்போம்,'' என்றான். சேனாதிபதியும் தன் ஆட்களில் ஒருவனைக் கூப்பிட்டு, ''இவர்களுக்கு நம் இருப்பிடத்திற்கு வர வழியைக் காட்டு! நான் நம் ஆட்களோடு முன்னதாக அங்கு செல்கிறேன்,'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

அப்போது சித்தசாதகன், ''ஜெயசீலா! இப்போது நாம் இந்தக் குள்ளர்களின் இருப்பிடத்திற்குப் போகத்தான் வேண்டுமா? நாம் அவசியமில்லாமல் இந்த வம்பில் மாட்டிக் கொண்டு விட்டோமே!'' என்றான்.

அப்போது ஜெயசீலன் ''சாதகா! நாம் இஷ்டப்பட்டா இங்கு வந்தோம்? அந்த முதலை மனிதன் மகரகேதுவைப் பிடிக்கும் முயற்சியில் தானே இங்கு வந்தோம்? இரண்யபுர அரசகுமாரியைத் தேடிக் கண்டுபிடித்து அவளை மீட்க வந்த நாம் இங்கு தள்ளப்பட்டுவிட்டோம். ஆயினும் அந்தக் கிருபாணஜித்தனை எமலோகத்திற்கு அனுப்பிவிட்டு நம் முயற்சியில் தொடர்ந்து ஈடுபடுவோம்,'' என்றான்.

சித்தசாதகனும், ''சரி, அதையே செய்வோம்! அவனோடு அந்த மனிதக் குரங்கையும் சேர்த்து அங்கே

அனுப்பிவைப்போம். சரி, நாம் கடாக் குள்ளர்களின் ராணி வசிக்கும் இடத்திற்குச் செல்வோம்!'' என்றான்.

இதே சமயம் மொடாக் குள்ளர் படைத் தலைவனுக்கும் கிருபாண ஜித்தனுக்குமிடையே வாக்குவாதம் ஏற்பட்டது. படைத் தலைவன் கிருபாணஜித்தன் எடுத்த முடிவு சரி அல்ல என்று கூறவே, கிருபாணஜித்தன் ''இது போர்த் தந்திரம். இதைப் புரிந்து கொள்ள மூளை வேண்டும். இப்போது நம் எதிரி ஜெயசீலன். அவனை நாளைக்குள் கொன்றாக வேண்டும். இந்த மனிதக் குரங்கை என்ன செய்வது என்று கேட்கிறாயா? அதைச் சுதந்திரமாகத் திரியவிட்டு விடுகிறேன்,'' என்று கூறி, அதைப் பிணைத்திருந்த இரும்புச்சங்கிலியை அகற்றிவிட்டான்.

மொடாக்குள்ள தலைவன் கிருபாணஜித்தனிடம், ''நீ எடுத்த முடிவு சரியல்ல. இதனால் நம் படைக்குத் தான் சேதம் ஏற்பட்டிருக்கிறது. நாம் பின்வாங்கக்கூடாது. நின்று போராடி எதிரிகளைத் தாக்க வேண்டும். இதுதான் சரியாயன வழி,'' என்றான்.

கிருபாணஜித்தனோ, ''இதோ பார்! இப்போது என்ன செய்ய வேண்டும் என்று எனக்குத் தெரியும். உன் யோசனை எதுவும் தேவை இல்லை. நான் சொன்னால் சொன்னதுதான். அதன்படி எல்லோரும் நடக்கவே வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் எதிரியின் கை தான் ஓங்கி விடும். நான் பயங்கர மனிதக் குரங்கை அவிழ்த்து விட்டுவிட்டேன். அதனால் எதிரிகள் கதி கலங்கி ஓடிவிடப் பார்ப்பார்கள். நம் மனிதக் குரங்கோ அவர்களை அடித்து ஓட ஓட விரட்டிவிடும். அப்போது நாமும் நம் பயங்கரத் தாக்குதலை நடத்தலாம். அதனால் மனிதக் குரங்கு என்ன செய்யப் போகிறது என்பதை நீயே பார்!'' என்றான். மனிதக் குரங்கு மொடாக் குள்ளர் படைத் தலைவனைப் பிடித்து உயரத் தூக்கியது. அதைக் கண்ட குள்ளர்கள் கூச்சல் போட்டவாறே கிருபாணஜித்தனையும் மனிதக் குரங்கையும் சூழ்ந்து கொண்டார்கள். *(தொடரும்)*



# வாழும் முறை இதுவே!

கண்ணன் அந்த அலுவலகத்தில் கடைநிலை ஊழியன். அவனுக்குச் சம்பளம் மிகக் குறைவே. ஆனால் எப்போதும் சிரித்த முகத்தோடும் திருப்தி அடைந்தவனாய்த் தென்பட்டான். இதைக் கண்ட தலைமைக் கணக்காளர் தனபாலன், ''என்னால் இவனைப் போல சந்தோஷமாகவும் திருப்தியாகவும் இருக்க முடியவில்லையே! நான் இவனைவிட ஐந்து மடங்கு சம்பளம் வாங்கியும் பணம் போதாமல் மாதாமாதம் கடன் வேறு வாங்கு கிறேன். இவன் எப்படிச் செலவு செய்கிறான்?'' என்றெண்ணி கண்ணனை அழைத்து, ''நீ எப்படி இவ்வளவு சந்தோஷமாக இருக்கிறாய்?'' என்று விசாரித்தான்.

கண்ணனும், ''நான் என் சம்பளத்தைத் திட்டமிட்டுச் செலவு செய்கிறேன். சம்பளத்தை நான்காய்ப் பிரித்து ஒரு பகுதி கடனை அடைக்கவும், ஒரு பகுதி எனக்கும், ஒரு பகுதி புண்ணியச் செயல்களுக்கும், மீதமுள்ள பகுதி வட்டிக்கு கடன் கொடுக்கவும் பயன்படுத்துகிறேன்,'' என்றான். அதைக் கேட்ட தனபாலன், ''இவ்வவளவு செய்து வட்டிக்குக் கடனும் கொடுக்கிறாயா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்க, கண்ணன் சிரித்தவாறே, ''நான் சொன்னது உங்களுக்குப் புரியவில்லை. கடன் தீர்ப்பது என்பது என் பெற்றோருக்கு செய்ய வேண்டிய கடமை. எனக்கு என்றால் என் குடும்பச் செலவு, புண்ணியச் செயல்கள் என்பது என் உடன்பிறந்தோருக்காகச் செலவு செய்வது, வட்டிக்குக் கடன் கொடுப்பது என் மகன், மகளைப் படிக்க வைப்பது. அவர்கள் பெரியவர்களாகி சம்பாதித்து நமக்குக் கொடுப்பது வட்டி போலத் தானே!'' என்றான்.

அதுகேட்டு தனபாலன் வியந்து கண்ணனைப் போலத் திட்டமிட்டு செலவு செய்து வரலானான்.



நவீன
வேதாளக்
கதை

# ஆசிரியர் விளக்கம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான்.

அதன்பின் அவன் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படி விடாது முயற்சி செய்வது ஏதாவது சில அபூர்வ சக்திகளை அடையவா? அவற்றை அடைந்து நீ சுயநலம் கருதி அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளப் போகிறாயா? சில அபூர்வ சக்திகளை அடைந்த



ரகுவரன், ஜெயந்தன் என்ற இருவரைப் பற்றிய கதை ஒன்றைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்!'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

அரசலூரில் அனந்தன் என்ற ஆசிரியரிடம் அவ்வூர் சிறுவர்களான ரகுவரனும் ஜெயந்தனும் ஐந்து வருட காலம் கல்வி பயின்றார்கள்.

அப்போது அவர் ''நீங்கள் இருவரும் என்னிடம் கல்வி கற்றது மட்டும் போதாது. ஞானானந்தரின் குருகுலத்திற்குப் போய் அவரிடம் சில ஆண்டுகள் கல்வி பயில வேண்டும். அங்கு பல கலைகளைக் கற்க உங்களுக்கு அரிய வாய்ப்பு கிடைக்கும்,'' எனக் கூறவே, அவர்கள் இருவரும் அந்த குருகுலத்திற்குச் சென்றார்கள்.

ஞானானந்தரும் அவர்களைத் தம் குருகுலத்தில் சேர்த்துக் கொண்டு பல கலைகளில் தேர்ச்சி பெறும் விதத்தில் போதித்து வந்தார். சில ஆண்டுகள் கழிந்தன. அப்போது அவர் ரகுவரனையும் ஜெயந்தனையும் அழைத்து, ''உங்களுக்கு இங்கே கற்பிக்க வேண்டியவற்றை எல்லாம் கற்றுக் கொடுத்துவிட்டேன். நீங்களும் பல கலைகளைக் கற்றுக் கொண்டதோடு பல அரிய சக்திகளையும் அடைந்திருக்கிறீர்கள். இவற்றை சுயநலத்திற்கு பயன்படுத்திக் கொள்ளாமல் மிகவும் தேவை என்ற நிலையில் எச்சரிக்கையுடன் உபயோகப்படுத்திக் கொள்ளுங்கள். இதை எப்போதும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்,'' என்று கூறி அவர்களுக்கு ஆசிகள் அளித்து அனுப்பினார்.

ரகுவரனும் ஜெயந்தனும் தம் ஊருக்குத் திரும்பலானார்கள். அப்போது ரகுவரன் ஜெயந்தனிடம், ''நண்பா! குரு சொன்னதைக் கேட்டாயா! நம்மிடம் அரிய சக்திகள் இருந்தபோதிலும் அவற்றை நமக்கெனப் பயன்படுத்திக் கொள்ளாமல் மிகவும் தேவைப்படும்போது தான் உபயோகிக்க வேண்டும் என்று அறிவுறுத்தி இருக்கிறார். அவர் கூறியது போலவே நடப்போம்,'' என்றான். ஜெயந்தனும் தலையை ஆட்டியவாறே வழி நடந்தான்.

வழியில் குறிச்சி என்ற கிராமம் வந்தது. அவர்கள் அங்கு சேர்ந்தபோது அங்கு குஸ்திப் போட்டி நடக்கப் போவதாகவும், அதில் வெற்றி பெற்று முதலாவதாக வருபவருக்கு அவ்வூரார் ஆயிரம் பொற்காசுகள் அளிப்

பார்கள் என்றும் அவர்களுக்குத் தெரிந்தது. மேலும் அந்த வட்டாரத் திலேயே தனக்கு நிகர் யாரும் இல்லை என்று பெயர் பெற்ற பாலய்யா என்ற பயில்வான் கலந்து கொள்ளப் போவதால் ஆயிரம் பொற் காசுகள் அவனுக்குத் தான் கிடைக் கும் என்றும் எல்லோரும் பேசிக் கொண்டார்கள். அவனும் மீசையை முறுக்கிக் கொண்டு எல்லோரை யும் அலட்சியமாகப் பார்த்தவாறே போட்டி நடக்கும் இடத்திற்குச் சென்று கொண்டிருந்தான்.

அப்போது ரகுவரன் ஜெயந்தனி டம், ''இவன் கர்வத்தோடு போவ தைப் பார்த்தாயா? இவன் கொட் டத்தை அடக்க வேண்டும். எனக்கு இந்தப் பணம் தேவை இல்லை என்றாலும் நான் குருகுலத்தில் கற்ற மற்போர்க் கலையில் தேர்ந் தவன் என்பதைக் காட்டப் போகி றேன்,'' என்றான்.

அப்போது ஜெயந்தன், ''நீயோ பணக்காரன். உனக்கு இந்தப் பந்தயப் பணம் தேவை இல்லை என்றாலும் எனக்கு அது தேவை. எனவே, நான் இந்தப் பந்தயத்தில் கலந்து கொள் கிறேன். நீ போக வேண்டாம்,'' என்றான்.

ரகுவரனும், ''சரி, நீ கூறுவதை ஏற்கிறேன். உனக்குப் பணம் தேவை என்பது ஒருபுறம் இருக்கட்டும். இந்த பாலய்யா தனக்கு நிகர் யாரும் இல்லை என்று கூறிக் கொண்டு திரிகிறார்கள். அது தவறு என்று நிரூ பிக்க வேண்டும். நாம் இருவருமே





மற்போர்க் கலையில் குருகுலத்தில் மற்ற மாணவர்களைவிடச் சிறந்து விளங்கினோம். அதனால் பாலய்யனை எதிர்க்க நீயே போய் வெற்றி பெற்று வா!'' எனவே, ஜெயந்தனும் போட்டி நடக்கும் இடத்திற்குச் சென்றான். போட்டி ஆரம்பமாகியது. பாலய்யா தன்னோடு குஸ்தி போட வந்தவர்களை எல்லாம் தோற்கடித்துக் கொண்டே வந்தான்.

கடைசியில் ஜெயந்தனின் முறை வந்தது. அவன் பாலய்யாவுடன் குஸ்தி போட்டான். ஜெயந்தனின் தாக்குதலை சமாளிக்க முடியாமல் பாலய்யா மல்லாக்க விழுந்தான். ஐந்து நமிடங்களாகியும் பாலய்யா எழுந்திருக்கவில்லை. ஜெயந்தன் அவனது இரு கால்களையும் பிடித்து இழுத்து ஓர் ஓரத்தில் போட்டுவிட்டுக் கூடியிருந்த மக்களை வணங்கி, வெற்றிப் புன்னகை புரிந்தான். அங்கு கூடியிருந்தவர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்து கைதட்டி அவனைப் பாராட்டினார்கள்.

கிராமத் தலைவரும், ''பேஷ்! உன்னைப் பாராட்டுகிறேன். இந்த பாலய்யா தன்னை யாராலும் எதுவும் செய்ய முடியாது என்று ஜம்பமாகக் கூறித் திரிந்து கொண்டிருந்தான். இவனைக் கண்டு எல்லோரும் நடுங்கிக் கொண்டிருந்தார்கள். அதனால் இவன் அக்கிரமச் செயல்களைச் செய்து கொண்டு வந்தான். இன்று இவனது கொட்டம் அடங்கியது. நீ எங்களுக்குச் செய்த பெரிய உதவி இது,'' என்று கூறி அவனுக்கு ஆயிரம் பொற்காசுகளை அளித்தார்.

பரிசை வாங்கிக் கொண்டு ஜெயந்தன் வரவே, ரகுவரன் அவனையும் கூட்டிக் கொண்டு காட்டு வழியே தன் ஊருக்குச் செல்லலானான். அப்போது நன்கு இருட்டிவிடவே, இருவரும் ஓரிடத்தில் தங்கிவிட்டுக் காலையில் எழுந்து தம் ஊருக்குப் போகத் தீர்மானித்தார்கள். சுற்றிலும் பார்த்து முடிவில் ஒரு மரத்தடியில் படுத்துத் தூங்கினார்கள்.

பாதி ராத்திரி ஆனது. அப்போது தம்மை யாரோ தட்டி எழுப்பியது போல இருக்க நண்பர்கள் இருவரும் கண்விழித்துப் பார்த்தார்கள். கட்டுமஸ்தான மூன்று முரடர்கள் கத்திகளை அவர்கள் முன் நீட்டி, ''உம்! கிராமத்தில் நீங்கள் பெற்ற பொற்காசுகளையும் உங்களிடம் உள்ள பணத்தையும் மரியாதையாக எடுத்துக்

கொடுத்துவிடுங்கள். இல்லையேல் உங்களைக் கொன்றுவிடுவோம்,'' என்று மிரட்டினார்கள்.

அப்போது ஜெயந்தன் 'உம்' என்று உரக்கக் கூவித் தன் வாளின் பிடியின் மீது கையை வைத்தான். அப்போது ஒரு முரடன் ரத்தம் கக்கியவாறே கீழே விழுந்தான். அதைக் கண்டு மற்ற இரு முரடர்களும், ''ஐயோ! இவர்கள் மந்திரவாதிகள்!'' என்று கத்திக் கொண்டே ஓட்டம் பிடித்தார்கள்.

அதைக் கண்டு ரகுவரன் ஆச்சரியப்பட்டான். அவனுக்கு சட்டென சந்தேகம் ஏற்பட்டது. அவன் ஜெயந்தனிடம், ''நீ அரிய சக்தியைப் பயன்படுத்தி இந்த முரடனை இவ்வாறு செய்தாயா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட ஜெயந்தன் தலை குனிந்தவாறே, ''இது மட்டுமல்ல. பயில்வான் பாலய்யாவுடன் குஸ்தி போட்டபோதும் அரிய சக்தியைப் பயன்படுத்தி வெற்றி பெற்றேன்,'' என்றான்.

அப்போது ரகுவரன், ''நம் குரு சொன்னதை மறந்துவிட்டாயா? அரிய சக்தியை சர்வ சாதாரண விஷயங்களுக்கும் சுயநலததிற்கும் பயன்படுத்தக் கூடாது என்றுதானே கூறினார். நீயோ சுயநலனுக்காகப் பயன்படுத்திவிட்டாயே!'' என்றான்.

ஜெயந்தனோ, ''இல்லை. நான் என்னுடைய சுயநலனுக்காகப் பயன்படுத்தவில்லை!'' எனவே, ரகுவரன் ''நீ சொல்வது தவறு. சுயநலத்திற்காகத் தான் செய்தாய்!'' என்றான். இதனால் இருவரிடையே பலத்த



வாக்குவாதம் மூண்டது. முடிவில் அதுபற்றித் தம் ஊர் ஆசிரியர் அனந்தனிடம் கேட்டு அவர் கூறுவதை ஏற்பது என அவர்கள் தீர்மானித்தார்கள்.

தம் ஊரை அடைந்ததும் அனந்தனைக் கண்டு, ''ஐயா! நாங்கள் படிப்பு முடிந்தபின் ஞானானந்தரின் குருகுலத்திலிருந்து புறப்பட்ட போது அவர் நாங்கள் பெற்ற அரிய சக்திகளை சுயநலத்திற்காகப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது என்று அறிவுரை கூறி அனுப்பினார். ஆனால் ஜெயந்தன் தன் பணத்தை பத்திரப்படுத்திக் கொள்ள அச்சக்தியை இரு முறை பயன்படுத்தி இருக்கிறான். இது சரியா? நீங்களே கூறுங்கள்!'' என்று ரகுவரன் கூறினான்.

ஜெயந்தனும், ''ஐயா! நீங்களே கூறுங்கள். பயில்வானைத் தோற்கடிக்கவும் முரடர்களை விரட்டியதற்கும் நான் அரிய சக்தியைப்

பயன்படுத்தியது சுயநலத்திற்காக அல்ல. இதைச் சொன்னால் இந்த ரகுவரன் நான் கூறுவது தவறு எனக் கூறி வாக்குவாதம் செய்கிறான். இதற்கு நீங்களே தீர்ப்பு கூறுங்கள்,'' என்று வேண்டினான்.

அனந்தனும் தீவிரமாக ஒரு நிமிடம் யோசித்துவிட்டு, ''ரகுவரா! இதில் ஜெயந்தனின் சுயநலம் என்பது கொஞ்சமும் இல்லை. அவன் செய்தது சரியானதே. நீயே ஆழ்ந்து சிந்தித்துப் பார்! உனக்கே அப்போது நான் சொன்னது முற்றிலும் சரி எனத் தெரியும்!'' என்றார்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி, ''ஜெயந்தன் இருமுறை அரிய சக்தியைப் பயன்படுத்தியது தன் பணத்தைப் பாதுகாத்துக் கொள்ளத்தானே? இது சுயநலம் அல்லாமல் வேறு என்ன? இதைப் புரிந்து கொள்ளாமலா அனந்தன் தீர்ப்புக் கூறினார்? இந்த வினாக்களுக்கு சரியான விடைகள் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகிவிடும்,'' என்றது.

அதற்கு விக்கிரமனும், ''அனந்தன் கூறியது முற்றிலும் சரியே. பாலய்யா தனக்கு நிகர் யாருமே இல்லை என்று தலைகால் தெரியாமல் துள்ளித் திரிந்து கொண்டிருந்தான். அவனது மமதையை அடக்கத் தான் ஜெயந்தன் அரிய சக்தியைப் பயன்படுத்தினான். இது சுயநலம் அல்ல. மூன்று முரடர்கள் கத்திகளைக் காட்டி ரகுவரனையும் ஜெயந்தனையும் மிரட்டினார்கள். அப்போது அவர்கள் ரகுவரனைக் கொன்றுவிடுவார்களோ என்று எண்ணியே ஜெயந்தன் அப்போதும் அரிய சக்தியைப் பயன்படுத்தினான். இப்படிச் செய்ததும் சுயநலத்திற்காக அல்ல. இப்படி எண்ணித் தான் அனந்தன் தன் தீர்ப்பைக் கூறியிருக்கிறார்,'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



## இந்தியப் புராதனக் கதைகள் - 5

# பார்வையற்ற பரதேசி



ஒரு மலையின் அடிவாரத்தில் மழைக் காலத்தின்போது புத்தர் தங்கி இருந்தார். அங்கே இருந்த பல குகைகளில் அவரது சீடர்களும் தங்கி இருந்தார்கள். புத்தரைக் கண்டு மத விஷயமாகச் சர்ச்சைகள் புரிய பல பண்டிதர்கள் அங்கு வந்து கொண்டிருந்தார்கள். ஒருநாள் மழை நின்று நல்ல வெயிலும் அடித்தது.

அப்போது புத்தர் தம் குகையிலிருந்து வெளியே வந்து உலாவிக் கொண்டிருந்தார். சிலர் வந்து அவரை வணங்கினார்கள். அவரும் அவர்களை வாழ்த்தினார்.

அப்போது அவர்களில் ஒருவர், ''மகாத்மா! தாங்கள் வன்முறையை ஆதரிப்பது இல்லை தானே?'' என்று கேட்டார். புத்தரும் ''நான் அதை அறவே வெறுப்பவன்,'' என்றார்.

அப்போது கேள்வி கேட்டவர் ''அப்படியானால் தங்கள் சீடர்களில் ஒருவர் நூற்றுக்கணக்கான எறும்புகளை ஏன் கொன்றார்? அதை எம் கண்களால் பார்த்தோம். அதோ கல்லின் மீது கவலையற்றுப் படுத்திருக்கும் பரதேசி தான் அப்படிச் செய்த தங்களது சீடர்,'' என்றார்.

புத்தரும் அங்கு படுத்திருக்கும் பரதேசியைப் பார்த்துவிட்டு, ''அவர் ஓர் எறும்பைக் கூடக் கொல்லவில்லை,'' என்றார். அப்போது கேள்வி கேட்டவர், ''நான் மட்டும் அல்ல. என்னோடு சேர்ந்த இவர்களும் அவர் தம் காலால் எறும்புகளை மிதித்து நசுக்கிக் கொன்றதைப் பார்த்தார்கள்,'' என்றார்.

- பாரதீயன் -



புத்தரோ, ''எறும்புகள் தாமே இறந்தன. அவர் அவற்றைக் கொல்ல வில்லை,'' என்றார்.

அதுகேட்டு யாவரும் ஆச்சரியப் படவே, புத்தரும் ''நீங்கள் குற்றம் சாட்டும் அந்தப் பரதேசி மிகவும் இரக்க சுபாவம் கொண்டவர். அவர் மனதில் வன்முறை என்ற எண்ணமே தோன்றாது. அவரால் எறும்புகள் இறந்திருக்கலாம். ஆனால் அவர் அவற்றைக் கொல்லவில்லை. ஒரு செய்கையைக் கொண்டு எதையும் தீர்மானிக்க முடியாது. அதற்கு உள்நோக்கம் உள்ளதா என்பதையும் சிந்திக்க வேண்டும். அந்தப் பரதேசி பார்வையற்றவர்,'' என்றார்.

அப்போது புத்தர் கூறியதைக் கேட்ட யாவரும், ''அட பாவமே! பார்வையற்றவரா அவர்!'' என்று அனுதாபப்பட்டார்கள். புத்தரும், ''ஆம்! முன்பிறப்பில் செய்த பாவத்தின் பலனை இந்தப் பிறப்பில் பார்வையற்றவராகப் பிறந்து அனுபவித்துக் கொண்டிருக்கிறார்,'' என்று கூறவே, அவர்கள் ''அவர் முன்பிறப்பில் அப்படி என்ன பெரிய பாவம் செய்தார்?'' என்று கேட்டார்கள்.

புத்தரும், ''அந்தப் பரதேசி முன் பிறப்பில் திறமை மிக்க வைத்தியராக இருந்தார். ஒருநாள் அவர் பாதையில் ஒரு பெண் தட்டுத்தடுமாறி நடந்து கொண்டிருப்பதைக் கண்டார். அவர் அவளிடம், ''நீ ஏன் இப்படித் தடுமாறி நடக்கிறாய்?'' என்று கேட்டார். அவளும், ''ஒரு கடும் காய்ச்சல் எனக்கு வரவே, நான் பார்வையை இழந்துவிட்டேன்,'' என்றாள்.

அவரும், ''நான் ஒரு வைத்தியன். உனக்கு சிகிச்சை அளித்துப் பார்வை கிடைக்கச் செய்கிறேன். அதன் பிறகு நீ எனக்குத் துணையாக என் வீட்டில் இருக்க வேண்டும்,'' என்றார். அவளும் அதற்குச் சம்மதித்து அவருடன் சென்றாள்,'' என்று கூறி மேலும் தொடர்ந்தார்.

''அவள் பரம ஏழை. ஒரு பணக்காரர் வீட்டு வேலைக்காரி. கையில் பணம் இல்லாததால் அவளால் கண்களுக்கு வைத்தியம் செய்து கொள்ள முடியவில்லை. ஒரு வைத்தியர் இரக்கப்பட்டு வைத்தியம் செய்வதாகக் கூறியதும் அவள் மகிழ்ந்து போனாள். வைத்தியரும் தன் வீட்டில் அவளுக்குச் சிகிச்சை அளித்து சில தினங்களிலேயே அவளுக்குப்

பார்வை கிடைக்கச் செய்தார். பார்வை கிடைத்ததும் அவள் தன் முந்தைய பணக்கார எஜமானரின் வீட்டிற்கே போய்விடத் தீர்மானித்தாள். அதனால் அவள் பொய்யாக, ''எனக்கு நீங்கள் இவ்வளவு நாட்கள் சிகிச்சை செய்தும் பார்வை வரவில்லை. அதனால் என் பழைய எஜமானர் வீட்டிற்கே போய்விடுகிறேன்,'' என்றாள்.

அவள் பொய் சொல்லி ஏமாற்றுகிறாள் என்றும், அவளால் அப்போது நன்கு பார்க்க முடிகிறது என்றும் வைத்தியர் தெரிந்து கொண்டார். அதனால் அவர் ஒரு மையை அவள் கண்ணில் தடவி, ''அப்படியா? உன்னால் எதையுமே பார்க்க முடியவில்லையா? ஆகா! உனக்கு அளித்த சிகிச்சையில் ஒரு மையைத் தடவ மறந்துவிட்டேன். இப்போது அதைத் தடவி இருக்கிறேன். இன்னும் ஒரு நாழிகைக்குள் உன்னால் எதையும் நன்றாகப் பார்க்க முடியும்,'' என்றார்.

அவளும் தன் பார்வை மேலும் தெளிவாகும் என எண்ணி மகிழ்ந்தாள். ஆனால் ஒரு நாழிகைக்குப் பிறகு அவளுக்கு மீண்டும் கிடைத்த பார்வை போய்விட்டது. அப்போது அவள், ''ஐயோ! நீங்கள் சிகிச்சை செய்து குணப்படுத்தி பார்வை கிடைக்கச் செய்தீர்கள். இப்போது அந்தப் பார்வை போய்விட்டதே!'' என்று கதறினாள். வைத்தியரோ, ''நீ பொய் சொல்லி ஏமாற்றியதற்காக நான் அளித்த தண்டனை இது!'' என்று கூறிச் சிரித்தார்.

அந்தப் பெண் படிக்காதவள். முட்டாள்தனமாக நடந்தாள். அது மன்னிக்கக் கூடியதே. ஆனால் நன்கு படித்த ஒரு வைத்தியர் தன் நோயாளிக்கு வேண்டுமென்றே தீங்கு இழைத்தது மன்னிக்க முடியாத பாவச் செயல். முன்பிறப்பில் ஒருவரது பார்வையைப் போக்கிய அவர் மறுபிறப்பில் அதற்கு தண்டனையாகப் பார்வையற்றவராகப் பிறந்து அல்லல் படுகிறார்.''

இவ்வாறு புத்தர் கூறியதும் அவருடைய சீடர்கள் ''நீங்கள் அவரைப் பற்றிக் கூறியதால் இப்போதுதான் புரிந்தது!'' எனக் கூறினார்கள்.





# பாட்டன் சொத்து

நல்லசிவமும் நாகப்பனும் அடுத் தடுத்த வீட்டுக்காரர்கள். நல்லசிவம் மிகவும் நல்லவன். ஏழையானாலும் பிறருக்கு உதவி புரிபவன். நாகப்பன் பணக்காரன். யாரையும் லட்சியம் செய்யாதவன். பிறர் நன்றாக வாழ் வதைப் பார்த்தால் அவனுக்கு வயிற் றெரிச்சலாக இருக்கும்.

ஒருநாள் நாகப்பனின் வீட்டு வாச லில் ஒரு நாய் நின்று குரைக்க அவன் கோபத்தோடு அந்த நாயைக் கல்லால் அடித்து விரட்டினான். அது நல்ல சிவத்தின் வீட்டுவாசலில் நின்று குரைக்க, அவனும் அதற்கு கொஞ்சம் சாதம் போட்டான். நாயும் அதைத் தின்றுவிட்டு நன்றி செலுத்துவது போல வாலை ஆட்டியது. பிறகு அது அவனது வீட்டிற்குள் வேகமாக ஓடி கொல்லைப்புறத்தில் ஓரிடத்தில் நின்று காலால் மண்ணைப் பறித்தது.

அதன் செய்கையைக் கண்ட நல்ல சிவத்தின் தாயார் அவனைக் கூப் பிட்டு ''சிவம்! பைரவர் ஏதோ தெரி விக்கிறார். நீ அந்த இடத்தைத் தோண் டிப் பார்!'' என்றாள். நல்லசிவம் கடப்பாரை, மண்வெட்டி கொண்டு அந்த இடத்தைத் தோண்டினான். அங்கு ஒரு மரப்பெட்டி அந்தப் பள் ளத்திலிருந்து அகப்பட்டது.

அதை அவன் எடுத்துத் திறந்து பார்க்கவே, அது நிறையத் தங்கக் காசுகளும் ஒரு தாமிரத் தகடும் இருப் பதைக் கண்டான். அது அவனது தாத்தா தன் கைப்பட எழுதிய பத் திரம். அதில் 'இந்தப் பொற்காசுகள் நான் சம்பாதித்தது. இவற்றை என்

- சிவனார் செல்வன் -

வருங்கால சந்ததியினருக்கு விட்டுப் போகிறேன்' என்று எழுதப்பட்டு அவரது கையொப்பமும் இருந்தது.

அதன்பின் அவனது குடும்பம் வசதியாக வாழலாயிற்று. அவன் கொஞ்சம் நில புலன்களை வாங்கி விவசாயம் செய்து வந்ததோடு எப் போதும் போல எல்லோருக்கும் உதவி புரிந்து வந்தான். இதைக் கண்டு நாகப்பன் பொறாமை கொண்டான்.

நல்லசிவத் திற்கு எப்படிப் பணம் கிடைத்தது என்பதைத் தெரிந்து கொண்ட அவன் கிராம அதிகாரி யிடம் சென்று, ''நல்ல சிவத்திற்கு அவன் வீட்டுக் கொல்லைப்புறத் திலிருந்து புதையல் கிடைத்துள்ளது. அதை அவன் சட்டப்படி அரசாங் கத்திற்குக் கொடுக்காமல் தானே வைத்துக் கொண்டு விட்டான். நீங்கள் விசாரணை நடத்தி தக்க நடவடிக்கை எடுங்கள்,'' என்று புகார் கூறினான்.

கிராம அதிகாரியும் நல்லசிவத்தை அழைத்துவரச் சொல்லி, அவனுக்குப் பணம் எப்படிக் கிடைத்தது என்று விசாரித்தார். நல்லசிவமும் நடந்த தைக் கூறித் தன் தாத்தா எழுதி வைத்து விட்டுப் போன தாமிர பத்திரத்தைக் காட்டினான்.

அவரும் திருப்தி அடைந்தவராய் நாகப்பனிடம், ''நல்லசிவத்திற்குக் கிடைத்தது புதையல் அல்ல. அவனது பாட்டனார் விட்டுப் போன பணம்,'' என்று கூறி அவனை அனுப்பினார். தான் விரட்டிய நாயினால் நல்ல சிவத்திற்குப் பணம் கிடைத்தது என்பதை அறிந்த நாகப்பன் அந்த



நாய் மீண்டும் தன் வீட்டு வாசலுக்கு வருமா என்று பார்க்கலானான்.

சில நாட்களுக்குப் பின் அதே நாய் தன் வீட்டு வாசலில் நின்று குரைக்க, உடனே அவன் அதற்குச் சாதம் கொண்டு வந்து போட்டான். அது சாப்பிட்டுவிட்டு அவன் வீட்டு கொல்லைப்புறத்திற்கு ஓடியது. நாகப்பனும் அதன் பின்னாலேயே ஓடினான். நாய் அங்கு ஓரிடத்தில் குழி பறிப்பது கண்டு அவன் அதை விரட்டிவிட்டுத் தானே குழி தோண்டலானான்.

அக்குழியில் ஒரு மரப்பெட்டி இருக்கவே அவன் அதைத் திறந்து பார்த்தான். அதில் வைரமாலை, ஒட்டியாணம், தங்க வளையல்கள், அட்டிகை என்று பலவித நகைகள் இருந்தன.

அதில் தாமிரத் தகடு ஏதாவது இருக்கிறதா என்று தேடிப் பார்த்தான். அதுபோல எதுவும் இல்லை. பெட்டியை அவன் தன் வீட்டிற்குள் கொண்டு போனான். அவன் தனது பாட்டனார் எழுதியது போல ஒரு தாமிர பத்திரத்தைத் தயாரித்து வைத்துக் கொண்டான். அவன் மனைவியும் மகளும் கிடைத்த நகைகளை எடுத்துப் பகட்டாக அணிந்து கொண்டு ஊரில் திரிந்து வந்தார்கள்.

அந்நாட்டு மன்னர் மாறுவேடத்தில் நாட்டில் பல இடங்களுக்குப் போய் வருவது வழக்கம். அதன்படி அவர் நாகப்பனின் ஊருக்கும் வந்து அவ்வூர் கோயிலில் சுவாமி தரிசனம் செய்து கொண்டிருந்தார்.

அப்போது நாகப்பனின் மனைவி வைரமாலை அணிந்து கொண்டு கோயிலுக்கு வந்தாள். அதைக் கண்ட மாறுவேடத்தில் வந்த மன்னர் அது ராணியினுடைய முன்பு காணாமல் போன மாலை என்றும் பல நகைகளோடு அதுவும் திருடப்பட்டது என்றும் தெரிந்து கொண்டார்.

உடனே அவர் கிராம அதிகாரியைக் கண்டு தான் யாரென்று கூறி அரண்மனையில் திருடப்பட்ட வைர மாலையை ஒரு பெண்ணின் கழுத்தில் கண்டதாகச் சொன்னார். அவள் நாகப்பனின் மனைவி எனத் தெரியவரவே, அவர் நாகப்பனை அழைத்து வரச் சொன்னார். அவனை விசாரித்த போது அவன் தன் பாட்டனார் வைத்துவிட்டுப் போன நகைகளில் தன் மனைவி அணிந்திருந்த வைரமாலையும் ஒன்று எனக் கூறி தான் தயாரித்து வைத்திருந்த தாமிர பத்திரத்தைக் காட்டினான். ஆனால் காவலதிகாரிகள் போய்ப் பார்த்தபோது அவற்றில் அரண்மனை முத்திரையைக் கண்டு அவை அரண்மனையில் திருடப்பட்ட நகைகளே என்று கூறினார்கள்.

மன்னரும் நாகப்பனிடம் ''உன் பாட்டனார் இவற்றைத் திருடி உனக்குக் கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார். நீ திருடாத போதிலும் திருடப்பட்ட நகைகளை வைத்திருந்ததால் ஒரு வருட சிறை தண்டனை விதிக்கிறேன்,'' என்றார்.

நாகப்பன் சிறையில் அடைக்கப்பட்டான்.






## எலிகளுக்கு மரியாதை



ராஜஸ்தான் மாநிலத்தில் கார்னி தேவிக் கோயிலின் சிறப்பு என்ன தெரியுமா? இங்கு எலிகள் மரியாதை யுடன் நடத்தப்படுகின்றன. தேஷ்னோக் என்ற ஊரில் உள்ள இந்தக் கோயிலில் எலிகளைப் பாதுகாத்தும் உணவு அளித்தும் வருகிறார்கள். அவை அவ்வூரில் எங்கும் திரிந்தாலும் யாரும் ஒன்றும் செய்வதில்லை. இந்த எலிகளின் உடல்களிலுள்ள உயிர்கள் வேறு உடல்களில் புகுந்துவிடுகின்றன என்ற நம்பிக்கை இதற்குக் காரணம்.

கார்னி தேவி பல நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்த சன்னியாசினியாம். அவளுக்கு மந்திர மாய சக்திகள் இருந்தனவாம். ஒருமுறை அவள் வாழ்ந்த தேஷ்னோக்கில் ஒரு சிறுவன் இறக்கவே, அவள் அவனை உயிர்ப்பிக்கும்படி கடவுளிடம் வேண்டினாளாம். கடவுள் அவனை எலியாக உயிர்ப்பித்தாராம். அந்த எலி தன் உயிரை ஒரு மனித உடலில் செலுத்தும் வரை காத்திருந்ததாம். அப்போது முதல் அங்குள்ள மக்கள் எலிகளைப் புனித மானவைகளாகக் கருதுகிறார்கள். இன்றும் தேஷ்னோக்கிலுள்ள கார்னி தேவி ஆலயத்தில் எலிகள் மரியாதை பெற்று வருகின்றன.

## இனிய இரு மொழிகள்



உலகிலேயே இரு மொழிகளில் தான் சொற்கள் உயிரெழுத்தில் முடிகின்றன. அந்த இனிய மொழிகள் எவை என்று தெரியுமா?

நம் நாட்டின் தெலுங்கும் இத்தாலி நாட்டின் இத்தாலிய மொழியுமாகும்.



# மயானத்தில் விருந்து!

கள்ளியூர் கிராமத்தில் காமாட்சி என்பவள் இருந்தாள். அவள் துடுக்காகப் பேசுவதால் ஊரார் அவளுக்கு பத்திரகாளி என்ற பெயரைச் சூட்டி விட்டார்கள். கணவனை இழந்த அவள் சமையல் வேலை செய்து பிழைத்து வந்தாள். அவளது சமையல் அந்த வட்டாரத்தில் பெயர் பெற்றிருந்தது.

ஒருநாள் இரவில் அவள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கையில் யாரோ தன்னைத் தட்டி எழுப்புவது போல உணர்ந்து விழித்துப் பார்த்தாள். தன் எதிரே மூன்று குட்டிப் பிசாசுகள் இருப்பதைக் கண்டு அவள் பயந்து நடுநடுங்கினாள். அப்போது ஒரு பிசாசு ''காமாட்சி, பயப்படாதே! நீ இப்போதே மயானத்திற்கு வந்து எங்களுக்கு விருந்து சாப்பாடு சமைத்துப் போடு!'' என்றது.

காமாட்சி தனக்கு உடம்பு சரி இல்லை என்று சாக்கு சொல்லிப் பார்த்தாள். ஆனால் பிசாசுகள் அதை ஏற்காமல் ''நீ சமையலுக்கு வேண்டிய பாத்திரங்களுடன் அரைமணி நேரத்திற்குள் மயானத்திற்கு வந்து சேர வேண்டும். வராவிட்டால் உன் உயிர் போய்விடும்,'' என்று எச்சரித்து விட்டுப் போய்விட்டன.

காமாட்சி ஒரு சாக்குப் பையில் சமையலுக்குத் தேவையான பாத்திரங்களைக் கட்டி எடுத்துக் கொண்டு முனகியவாறே நடந்து ஊர் எல்லையை அடைந்தாள். அப்போது சமையல்காரன் கிட்டு வேறொரு ஊரில் சமையல் வேலை செய்து

- வே. லாவண்யா -

விட்டுத் தன் ஊருக்கு வந்து கொண்டிருந்தான். அவன் காமாட்சியைப் பார்த்து, ''எங்கே சாக்குப் பையுடன் போகிறாய்?'' என்று கேட்டான்.

காமாட்சியும் ''அதை ஏன் கேட்கிறாய்? சற்றுமுன் மூன்று பிசாசுகள் என் வீட்டிற்கு வந்து தூங்கிக் கொண்டிருந்த என்னைத் தட்டியெழுப்பி என்னை மயானத்திற்கு வந்து சமைத்துப் போடும்படிக் கூறி பயமுறுத்தி விட்டுப் போயிருக்கின்றன. எனக்கு ஒரே பயமாக இருக்கிறது!'' என அழமாட்டாத குறையாகக் கூறினாள்.

அப்போது கிட்டு ''நான் போய் அவற்றிற்கு விருந்து சாப்பாடு சமைத்துப் போட்டுவிட்டு வருகிறேன்,'' என்றான். காமாட்சியும் பாத்திர மூட்டையை அவனிடம் கொடுத்து, ''ஜாக்கிரதை. நாளைக் காலையில் பாத்திரங்களை என் வீட்டிற்குக் கொண்டு வந்து கொடுத்துவிடு!'' என்றாள்.

மயானத்தில் கிட்டுவைப் பார்த்த பிசாசுகள் ''காமாட்சி எங்கே? நீ யார்?'' என்று கேட்க, அவன் ''நானும் சமையல்காரன் தான். காமாட்சியின் கை சுளுக்கிக் கொண்டுவிட்டது. அதனால் பாத்திரங்களுடன் என்னை அனுப்பி இருக்கிறாள். உங்களுக்கு நான் சமைத்து சாப்பாடு போடுகிறேன்,'' என்றான். பிசாசுகளும் அரிசி, பருப்பு, எண்ணெய், காய்கறிகள் என்றெல்லாம் கொண்டு வந்து கிட்டுவிடம் கொடுத்தன. கிட்டுவும் ஒரு மணி நேரத்தில் சமையல் செய்து முடித்துவிட்டான்.

மூன்று பிசாசுகளும் சாப்பிட உட்



கார்ந்தன. வெங்காய சாம்பாரின் வாசனை மூக்கைத் துளைக்க, ஒரு பிசாசு மகிழ்ந்து போய் ''கல்யாண சமையல் சாதம், காய்கறிகளும் பிரமாதம், அஹஹ்ஹஹா!'' என்று பாடியது. மூன்று பிசாசுகளும் ''சாப்பாடு பிரமாதம். இதற்குமுன் இது போல சாப்பிட்டதே இல்லை'' என்று கூறி திருப்தியாகச் சாப்பிட்டுவிட்டு எழுந்தன. அவை ஒரு பை நிறைய காசுகளை கிட்டுவிடம் கொடுத்து விட்டு மறைந்தன.

கிட்டு பையை அவிழ்த்து எண்ணினான். சரியாக நூறு பொற்காசுகள் இருந்தன. சமையல் பாத்திரங்களைச் சாக்குப் பையில் போட்டுக் கொண்டு மயானத்திலிருந்து கிளம்பி காமாட்சியின் வீட்டை அடைந்தான்.

கிட்டு பாத்திர மூட்டையைத் திண்ணையில் இறக்கி வைத்துவிட்டு, ''காமாட்சி! உன் பாத்திரங்களை எல்லாம் பத்திரமாகக் கொண்டு வந்து விட்டேன். அப்புறம் அந்தப் பிசாசுகள் என் சமையலைப் பாராட்டி எனக்கு நூறு பொற்காசுகள் கொடுத்தன. அதில் பாதியை உனக்குக் கொடுக்கிறேன்,'' என்றான்.

பொற்காசுகள் என்றதும் காமாட்சிக்குப் பேராசை வந்துவிட, அவள் ''அதெல்லாம் முடியாது. நான்தானே உன்னை மயானத்திற்கு வேலைக்கு அனுப்பினேன். அதனால் பிசாசுகள் கொடுத்த பணம் முழுதும் எனக்கே சொந்தம். நீ செய்த வேலைக்காக உனக்கு ஒரு பொற்காசைக் கூலியாகக் கொடுக்கிறேன்,'' என்றாள்.

கிட்டு அது அநியாயம் என்று கூற, வாக்குவாதம் முற்றியது. அக்கம் பக்கத்தவர் காமாட்சியையும் கிட்டுவையும் கிராம அதிகாரியின்முன் நிறுத்தி அவர்களது வழக்கிற்குத் தீர்ப்பு கூறும்படி வேண்டினார்கள்.

கிராம அதிகாரி இருவரிடமும் தீர விசாரித்த பிறகு அவர், ''காமாட்சி பயந்த சமயத்தில் கிட்டு வலிய வந்து, தானே மயானத்திற்கு சமையல் செய்யப் போவதாகக் கூறியுள்ளான். இதிலிருந்து காமாட்சி அவனை அனுப்பவில்லை என்றும், கிட்டுவே வேலை தேடி, அதைச் செய்து, அதற்குக் கூலியாக பிசாசுகளிடமிருந்து பணத்தைப் பெற்றான் என்றும் நன்கு தெரிகிறது. கிட்டு சமையல் செய்ய காமாட்சியின் பாத்திரங்களை உபயோகப் படுத்தியதால் அதற்கு வாடகையாக ஒரு பொற்காசு மட்டும் கொடுத்து, மீதத்தை அவனே வைத்துக் கொள்ளட்டும்!'' என்று தீர்ப்பளித்தார்.

காமாட்சி திகைக்க, ஊரார் கை கொட்டிச் சிரித்தார்கள். அப்போது கிட்டு ''தீர்ப்பு நியாயமானது என்றாலும் அதன்படி அவளுக்கு ஒரு பொற்காசு கொடுப்பதோடு நானாக விரும்பி நாற்பத்தொன்பது பொற்காசுகளைக் கொடுக்கிறேன்,'' என்று அறிவித்தான்.

அதைக் கேட்ட காமாட்சி வெட்கி தலைகுனிந்து கொண்டாள்.





# சிறந்த கவிஞர்

விதர்ப்ப நாட்டை ஆண்ட மன்னன் விஜயசிம்மன் ஆண்டுதோறும் தசராப் பண்டிகையின்போது கவிஞர்களைக் கூட்டி அவர்களது படைப்புகளைக் கேட்டு அவற்றில் மிகச்சிறந்ததைத் தேர்ந்தெடுத்து அக்கவிஞருக்கு பரிசளித்து கௌரவித்து வந்தான். மன்னனே ஒரு கவிஞனாக இருந்ததால் அவன் தேர்ந்தெடுப்பது மிகச் சிறந்ததாகவே இருந்து வந்தது.

அந்த ஆண்டுக்கு வந்த கவிஞர்களில் இரு கவிஞர்களின் படைப்புகள் மிகச் சிறப்பானவையாக இருக்கவே, அவற்றில் எதற்குப் பரிசு அளிப்பது என்ற இக்கட்டான நிலை ஏற்பட்டது. ஒன்று சோமதேவர் என்பவருடையது, மற்றது கோவிந்தபட்டர் என்பவருடையது. இந்த இருவரில் யாரை அந்த ஆண்டின் சிறந்த கவிஞராக மன்னர் தேர்ந்தெடுக்கப் போகிறார் என்று அரச சபையில் உள்ளவர்களும் பொதுமக்களும் ஆவலுடன் எதிர்பார்க்கலானார்கள்.

மன்னனும் தன் தர்பாரில் உள்ள கவிஞர்களிடம் அபிப்பிராயம் கேட்கவே, அவர்களும் ''சோமதேவரின் படைப்பு இலக்கண விதிகளின்படி அமைந்துள்ளது. மிக அழகாக எதுகை மோனையுடன் சொற்களை கையாண்டிருக்கிறார். சமூகத்தின் உயர்நிலையிலுள்ளவர்களின் வாழ்க்கையை உயர்த்திக் காட்டியிருக்கிறார். சில இடங்களில் பண்டிதர்களே ஆழ்ந்து யோசித்தால் மட்டுமே புரியும் விதத்தில் சொற்கட்டுகள் அமைந்துள்ளன. இதுபோல கோவிந்தபட்டரின்

– சங்கரராம் –

படைப்பில் இல்லை. நடை மிகவும் சர்வ சாதாரணமாக உள்ளது. சமூக உயர்வு பற்றி எதுவும் இல்லை. இயற்கை பற்றியே அதிகமாக வலியுறுத்தப்பட்டுள்ளது,'' என்றார்கள்.

மன்னனும், ''கோவிந்தபட்டரின் படைப்பிலும் இலக்கணப் பிழை, எதுகை மோனை பிழை இருப்பதாகத் தெரியவில்லை. நீங்கள் கூறியதை வைத்துப் பார்த்தால் சோமதேவர் உயர்நிலை மக்களின் வாழ்க்கையை வர்ணித்து அது உயர வழி செய்திருக்கிறார் என்ற உங்கள் கருத்து நன்கு புலப்படுகிறது. கோவிந்தபட்டர் சாதாரண மக்களின் வாழ்க்கையையும் இயற்கைக் காட்சிகளையும் பற்றியே வர்ணித்திருக்கிறார். நாம் ஒருவருக்குப் பரிசளிக்கும்போது அவர் எப்படிப்பட்ட சூழ்நிலையில் தம் படைப்பை உருவாக்கினார் என்பதையும் கவனிக்க வேண்டும்,'' என்று கூறிச் சற்று நிறுத்தினான்.

அதுகேட்ட கவிஞர்கள் அவன் கூறுவதில் நியாயம் இருப்பதை உணர்ந்து, இன்னும் என்ன சொல்லப் போகிறான் என்று கவனமாகக் கேட்கத் தயாரானார்கள்.

மன்னனும் ''சோமதேவர் பணக்காரர். கவிதை எழுதுவதைப் பொழுது போக்காகக் கொண்டவர். தினமும் உயர்நிலை மக்களோடு பழகி அதே பழக்க வழக்கங்களைக் கொண்ட வர். எனவே அதுபற்றி அவர் வர்ணித்ததில் வியப்பில்லை. ஆனால் கோவிந்த பட்டர் ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர். சாதாரண மக்களின் வாழ்க்கை நிலை ஒன்றுபோல இல்லாமல் பல இடங்களில் பலவிதமாக இருக்கும். அவற்றை நினைவில் கொண்டு கற்பனை சேர்த்து இயற்கையோடு இயங்கும் அவற்றைத் தம் படைப்பில் புகுத்தி இருக்கிறார். இதற்கு உழைப்பு தேவை. எனவே கோவிந்தபட்டரின் படைப்பே சிறப்பானது என்று தெரிய வருகிறது. ஆக இவ்வாண்டின் சிறந்த கவிஞர் கோவிந்தபட்டரே!,'' என்றான். அதுவே சரியான முடிவு என்று யாவரும் ஏற்றனர்.



# செய்திச் சுடர்

## விசித்திர விருந்தாளிகள்




பிரேசிலின் ரியோடி ஜானிரோவில் ஹோட்டல்களில் முன்கூட்டியே இடங்களைப் பதிவு செய்து கொள்கிறார்கள். அந்நகரின் வழியே செல்லும் பயணிகளும் ஹோட்டல்களில் சிறிது நேரம் தங்கிவிட்டுச் செல்வதும் உண்டு. ஆகஸ்ட் மாதத்தின் ஒருநாளில் இரு விசித்திரப் பயணிகள் ஒரு ஹோட்டலுக்கு வந்து அங்கும் இங்கும் அலைந்ததைக் கண்ட மற்றவர்கள் பயந்து அலறினார்கள். அதனால் அந்தப் பயணிகள் நிற்காமல் கண்ணாடிக் கதவுகள், பீங்கான் தட்டுகளை உடைத்தும், மேஜை விரிப்புகளைத் தூக்கி எறிந்தும், அட்டகாசம் செய்தனர். இந்த வேண்டாத விருந்தாளிகளைப் பிடித்து அடக்கி இழுத்துச் செல்ல அந்த ஹோட்டல் நிர்வாகி வெளியார் உதவியை நாட, பொதுநலத் தொண்டர்கள் வந்து அவர்களைக் கூண்டில் அடைத்துக் கொண்டு சென்றார்கள். அந்த இரு விருந்தாளிகள் இரு சிறுத்தைப் புலிகள்.

## நாய்களுக்கு ஐஸ்கிரீம்

ஜப்பானுக்கு நீங்கள் போனால் அங்கு அகாகி நெயுகோ நிறுவனம் தயாரிக்கும் ஐஸ்கிரீம் கிடைக்கிறதா என்று பாருங்கள். இந்நிறுவனம் பலவித ஐஸ்கிரீம்களைத் தயாரித்து வருகிறது. நாய்களுக்குக் கூட தனியாக ஒருவித ஐஸ்கிரீமை இது தயாரித்து விற்கிறது. இந்த வித ஐஸ்கிரீம் கோப்பைகளில் நாய்களின் ஐஸ்கிரீம் என்று அச்சிடப்பட்டு இருக்கும்.

சாதாரண ஐஸ்கிரீமில் பால் சேர்க்கப் படுகிறது. இது நாய்களுக்குப் பிடிக்காததால் வேறு வித ஐஸ்கிரீம் அவைகளுக்காகத தயாரிக்கப் படுகிறது. இந்த ஐஸ்கிரீமை மனிதர்கள் கூட உட்கொள்ளலாம் என்று அந்த நிறுவனம் கூறுகிறது.

ஒரு கப் ஐஸ்கிரீமின் விலை 15 டாலர்கள் அதாவது 750ரூ. இந்த ஐஸ்கிரீம் அதிகத் தித்திப்பாக இராது. அதனால் சர்க்கரை வியாதி உள்ளவர்கள் அவ்வப்போது வாங்கி உட்கொள்கிறார்கள்.



# மத்தியப் பிரதேச நாட்டுப்புறக் கதை

மத்திய பிரதேசம் என்பது இந்தியாவின் நடுமத்தியிலுள்ள மாநிலம். இம்மாநிலம் தாதுப் பொருள்கள் நிறைந்தது. இயற்கை வளத்தோடு பல வன விலங்குகளைக் கொண்டது. விந்திய, சாத்புரா மலைத்தொடர்கள் சூழ பீட பூமியில் அமைந்துள்ள இம்மாநிலத்தில் நர்மதை, தபதி, சம்பல், சோன், மகாநதி, இந்திராவதி ஆகிய நதிகள் பாய்கின்றன.

முந்தைய பல சமஸ்தானங்கள் தற்போதைய மத்தியப் பிரதேசத்தில் சேர்ந்துள்ளன. கி.பி.1820ல் இப்பகுதி பிரிட்டிஷாரின் ஆட்சிக்குள் வந்தது. அப்போது இது மத்திய மாகாணம் என்று பெயர் பெற்றிருந்தது. நம் நாடு பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றபின் 1956ல் மத்திய பிரதேசம் உருவாக்கப்பட்டது. இதிலிருந்து சத்தீஸ்கட் என்ற மாநிலம் 2002ல் பிரித்து அமைக்கப்பட்டது.

மத்தியப் பிரதேசத்தின் பரப்பளவு 308000 சதுர கி.மீ. இதன் மக்கள் தொகை 60,385,118. இங்கு பேசப்படும் மொழி ஹிந்தி. இதன் தலைநகரம் போபால். இந்த மாநிலம் மலைவாசிகள் வாழும் மாநிலமாகக் கருதப்படுகிறது. இங்கு பலவகைப்பட்ட மலைச் சாதியினர் வாழ்கிறார்கள். கோண்டுகள், பீல், ஒரோயன், தன்கா, தன்கட், பானிகா, சஹாரியா என்பன அவை.

# சிங்கி சூர்வா, பாலி பிர்வா

பல நூற்றாண்டுகளுக்கு முன் இன்று மத்தியப் பிரதேசம் எனப்படும் பகுதியில் இரு நாடுகள் இருந்தன. அவை இரண்டும் கோண்டு எனப்படும் மலைச் சாதி மன்னர்களால் ஆளப்பட்டன. அவற்றில் பாலி நகரை ஆண்ட சிங்கி என்ற மன்னன் பல மாயமந்திரங்களை அறிந்தவனாம். இன்றும் கோண்டுகள் மாவீரன் சிங்கியைப் புகழும் நாட்டுப்புறப் பாடல்களைப் பாடி வருகிறார்



கள். பீரார் எனும் மற்றொரு நாட்டை சந்தாவைத் தலைநகராகக் கொண்டு ராஜா போகிபிலா ஆண்டு வந்தான்.

சிங்கி சூர்வாவுக்குப் பாலி என்ற மகன் இருந்தான். அவன் குழந்தைப் பருவத்திலிருந்தே துணிச்சல் மிக்கவனாய் பல துணிகரச் செயல்களைச் செய்து வந்தான். அதனால் மன்னன் சிங்கியும், அவன் மனைவியும் அவனைப் பற்றிப் பெருமைப்பட்டார்கள். அவனுக்கு ஏற்ற பெண்ணைத் தேடி, அவளை அவனுக்கு மணம் செய்து வைக்க விரும்பினார்கள்.

சிங்கி தன் மனைவியிடம் ''நாம் தேடும் பெண் எல்லாவிதத்திலும் சிறந்தவளாக இருக்க வேண்டும். ராஜகுமாரி என்று மட்டும் இருந்தால் போதாது,'' என்று கூறி வந்தான். அப்போது பீரார் மன்னன் போகிபிலாவின் குழந்தை கைலாவைப் பற்றி அவனது ஒற்றர்கள் தகவல் கொடுத்தார்கள். அதைக் கேட்ட சிங்கி சூர்வா தானே பீராருக்குச் சென்று அம்மன்னனிடம் கல்யாணப் பேச்சு நடத்துவது என்று தீர்மானித்தான்.

அவன் தனது வலிமைமிக்க குதிரையான ஹன்ஸ்தரின் மீது அமர்ந்து பீராரின் தலைநகரான சந்தாவை நோக்கிப் பயணமானான். ஹன்ஸ்தர் சாதாரணக் குதிரை அல்ல. பல அரிய மாயா சக்திகளைக் கொண்டது. அது மனிதர்களைப் போலப் பேசும். ஆகாயத்தில் பறந்து செல்லும். இத்தகைய குதிரை மீது அமர்ந்து சிங்கி பீராரின் தலைநகர் சந்தாவை அடைந்தான்.



## வரலாறு

மத்தியப் பிரதேசத்தின் வரலாறு நீண்டது, செழுமையானதும் ஆகும். அசோகர் தன் இளமைப் பருவத்தில் இங்குள்ள உஜ்ஜயினி நகரில் தான் இருந்தார். இப்பகுதி கி.பி.300 முதல் கி.பி.500 வரை குப்த சாம்ராஜ்ஜியத்தின் பகுதியாக இருந்தது. 7வது நூற்றாண்டில் ஹர்ஷவர்த்தன மன்னரின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது. 11வது நூற்றாண்டில் முஸ்லிம்கள் இதன் மீது படை எடுத்து வந்தார்கள். 16வது நூற்றாண்டு முடியும்போது இது முகலாயப் பேரரசின் ஆட்சிக்கு உட்பட்டு இருந்தது. பின்னர் சிறிது காலத்திற்கு மராட்டியர்களின் ஆட்சியில் இருந்தது. அதன் பிறகு பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் வந்தது. சில ராணிகள் இப்பகுதிகளை ஆண்டு பெயர் பெற்றனர். இந்தூரின் ராணி அகல்யாபாய், ராணி துர்க்காவதி, ராணி கமலாதேவி ஆகியோர் இம்மாநிலத்தின் புகழை உயர்த்திக் காட்டியுள்ளனர்.

சந்தா கோட்டைக்கு வெளியே ராஜா போகிபிலாவின் பூங்காவைக் கண்டு சிங்கி அங்கு படுத்து இளைப்பாறி னான். இரவானதால் அவனைத் தூக்கம் தழுவியது. ஹன்ஸ்தர் இங்கும்அங்கும் ஓடி பூங்காவின் பல செடிகளை மிதித்து அழித்துவிட்டது. மறுநாள் காலை பூங் காவைக் கண்ட காவலாளி ஓடிப்போய் மன்னனிடம் யாரோ ஒரு வீரனின் குதிரை பூங்காவை நாசப்படுத்திவிட் டதாகக் கூற, மன்னன் போகிபிலா கோபம் கொண்டு "யார் அந்த வீரன்? அவனைப் பிடித்து வாருங்கள்!" என்று தன் வீரர்களுக்குக் கட்டளை இட்டான்.

வீரர்கள் பூங்காவில் இருந்த சிங்கி யைத் தட்டி எழுப்ப, அவனோ அரைத் தூக்கத்தில் 'நான் பாலி நகர மன்னன் சிங்கி சூர்வா. நான் இங்குள்ள மன்ன னைக் கண்டு, அவன் மகள் கைலாவை என் மகன் பாலிக்கு மணம் செய்து வைக் கும் விஷயமாகப் பேச வந்துள்ளேன்," என்று கூறிவிட்டுத் தூங்கலானான்.

வீரர்கள் தாம் கேட்டதை மன்னனி டம் கூற, அவனோ "என் மகள் ஒரு பிச்சைக்காரனை மணக்கமாட்டாள். நீங்கள் போய் நான் ஒரு வாரத்தில் அவன் நாட்டின் மீது படையெடுக்கப் போவதாக அவனிடம் சொல்லுங்கள்," என்றான். வீரர்களும் மன்னன் கூறியதை சிங்கியிடம் சொல்ல, அவன் அதை லட்சியம் செய்யாமல் தூங்கினான். அவன் ஒரு வார காலத்திற்குத் தூங்கிக் கொண்டே இருந்தான்.

எட்டாவது நாள் மன்னன் போகி பிலா தன் வீரர்களுடன் பூங்காவிற்கு வந்து சிங்கி சூர்வாவைச் சூழ்ந்து கொள்ள, சிங்கி மந்திர சக்தியால் வீரர் களை வரவழைத்தான். இருதரப்பின

## கலையும் கைவினையும்



மத்தியப் பிரதேசம் அதன் நேர்த்தியான, நெய்த புடவைகளுக்குப் பெயர் பெற்றது. சண்டேரி, மஹேஸ்வரி ஆகிய நூல், பட்டுப் புடவைகள் மிகப்புகழ் பெற்றவை. குறிப்பாக மஹேஸ்வரி வகை. இவை எளியனவாயும் பல வண்ணங்களிலும் பிரபலமாகி உள்ளன.

நாட்டுப்புற ஆபரணங்கள் சோழிகளாலும் இறகுகளாலும் சிறு கற்கள் பதிக்கப்பட்டும் மலைவாசிகள் அணிபவை. இவை அழகுறக் கலை அம்சத்துடன் ஆடைகளிலும் இணைக் கப்படுகின்றன. நகைகள் தங்கம், வெள்ளி, வெண்கலம் மற்றும் கலப்பு உலோகங்களால் செய்யப்படுகின்றன.

உலோகக் கலையம்சம் கொண்ட பெட்டிகள், விளக்குகள், சாப்பிடும் தட்டுகள், கிண்ணங்கள் முதலியன இம்மாநிலத்து கைவினைப் பொருள்களில் சில. துணிகளால் பொம்மைகள் குவாலியரிலும் போபாலிலும் செய்யப்படுகின்றன. இவை வெளிநாடுகளிலும் பிரபலமாகி உள்ளன. பிதோரா, விபாய் எனப்படும் சுவர் வண்ணக் கலை பல மலைச்சாதிக் கூட்டங்களால் கையாளப்பட்டு வருகிறது.

ரும் கடுமையாகப் போர் புரிந்தார்கள். பீரார் வீரர்கள் தோற்று ஓடிவிட, சிங்கியும் மந்திர சக்தியால் வரவழைத்த வீரர்களை போகும்படிக் கூறிவிட்டான்.

அதுகண்டு போகிபிலாவே சிங்கி சூர்வாவுடன் சண்டை போட வந்தான். சிங்கி தன் குதிரை ஹன்ஸ்தர் மீது அமர்ந்து அவனை எதிர்த்தான். இருவரும் பல நாட்கள் சண்டையிட்டனர். ஒருநாள் சண்டை நடக்கையில் ஹன்ஸ்தர் கால் இடறித் தடுமாறவே சிங்கி கீழே விழுந்துவிட்டான். அந்த இடத்தில் பீரார் மன்னன் ஒரு ரகசியச் சுரங்கம் தோண்டி வைத்திருந்தான். அதில் சிங்கி விழுந்து அகப்பட்டுக் கொள்ள, போகிபிலா 'வெற்றி! வெற்றி!!' என்று கோட்டையே அதிரும்படிக் கத்தினான். சிங்கி இழுத்துச் செல்லப்பட்டு பாதாள இருட்டறையில் சிறை வைக்கப்பட்டான்.

தன் எஜமானன் இழுத்து செல்லப் படுவதை பார்த்த ஹன்ஸ்தர் எஜமானனைக் காப்பாற்ற முயல, பீரார் வீரர்கள் அதனை அடித்துத் துரத்தினர். வேறு வழியின்றி அது பாலி நகருக்கு விரைந்து சென்று ராணியிடம் ''மன்னர் இறந்து விட்டார். அவருக்காக துக்கம் அனுசரியுங்கள்!'' என்றது. ஆனால் இளவரசன் மனம் தளராமல் நடந்ததை விவரமாகக் கேட்டு அறிந்து கொண்டான்.

அவன் தன் தாயாரிடம் ''அம்மா! நீங்கள் மனம் தளர்ந்துவிடக் கூடாது,'' என்று கூறி, ''ஹன்ஸ்தர் என் தந்தையின் உடல் இழுத்துச் செல்லப்பட்டதைத் தான் பார்த்தது. அந்த உடலில் உயிர் இருந்ததா அல்லது இல்லையா என்று அதற்கு தெரியவில்லை. அதனால் என் தந்தை உயிருடன் தான் இருக்கிறார்



என்று உறுதியாக நம்புகிறேன். நான் போய்த் தேடி அவரை அழைத்து வருகிறேன்,'' என்றான்.

அவனது தாயாரோ ''நீ இன்னமும் குழந்தை தானே? உன் தந்தையைத் தோற்கடித்த எதிரியை நீ எப்படி எதிர்த்துப் போராடப் போகிறாய்? வேண்டாம், போகாதே!'' எனத் தடுத்துப் பார்த்தாள். அவன் கேட்காமல் தனக்கு வேண்டிய பொருள்களையும் சிறு தங்கக் கேடயத்தையும் வாளையும் எடுத்துக் கொண்டு ஹன்ஸ்தர் மீது அமர்ந்து, ''என் தந்தையின் ஆருயிர் நண்பனே! அவர் எந்த இடத்தில் விழுந்தார் என்பதை எனக்குக் காட்டு!'' என்றான்.

ஹன்ஸ்தரும் உற்சாகத்துடன் கிளம்பியது. அதற்குத் தன் சின்ன எஜமானன் மீது முழு நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. சிங்கி சூர்வாவை எப்படியாவது கண்டு பிடித்துக் கொண்டு வந்துவிடலாம்

# வரலாற்றுச் சிறப்பானவை



மத்தியப் பிரதேசம் சிற்பக் கலைக்குப் பெயர் பெற்றது. இம் மாநிலத்தின் கஜுராஹோ கோயில்கள் இதற்கு எடுத்துக்காட்டு. இங்குள்ள எண்பத்தைந்து கோயில்களும் தனிச்சிறப்பு வாய்ந் தவை. இங்குள்ள சிற்பங்கள் யாவரையும் வியக்க வைக் கின்றன. இம்மாநிலத்தில் வரலாற்றுப் புகழ்பெற்ற மற் றொரு இடம் சாஞ்சி. இங்குள்ள ஸ்தூபியை மௌரிய சக்கரவர்த்தியான அசோகர் நிறுவினார். ஓர்ச்சாவில் உள்ள அரண்மனைகளும் அவற்றின் உயரமான கூரை அடித்தளங்களும் சுவர்களில் தீட்டப் பட்டுள்ள வண்ண ஓவியங்களும் உயர்ந்த கலை அம்சத்தைக் காட்டுகின்றன. இன்னும் பல வர லாற்றுச் சின்னங்கள் இம்மாநிலத்தில் உள்ளன.

என்ற நம்பிக்கை ஏற்பட்டுவிடவே, அது அம்முயற்சிக்கு எல்லாவிதத்திலும் உதவுவது என்று தீர்மானித்து, தன் மாயசக்தியால் தன் இறக்கைகளைப் பரப்பி ஆகாய வழியே வேகமாகப் பறந்து சென்றது. நடுவழியில் தாகம் தணிக்க ஒரு நதிக்கரையில் இறங்கியது.



அப்போது 'உஸ்' என்ற சத்தமும் யாரோ அலறுவதும் கேட்டது. பாலி சத்தம் வந்த இடத்தைப் பார்த்தான். ஒரு பாம்பு இரு கழுகுக் குஞ்சுகளைப் பிடித்து விழுங்க முயன்று கொண்டிருந்தது.

அப்போது ஹன்ஸ்தர் பாலியிடம், ''ஆபத்தில் அகப்பட்டவர்களைக் காப் பாற்றுவது உன் கடமை. போய் அந்தக் குஞ்சுகளைக் காப்பாற்று!'' எனக் கூறியது. பாலி பாம்பும் அந்தக் கழுகுக் குஞ்சுகளும் இருந்த மரத்தில் ஏறினான். அவன் அந்தப் பாம்பைக் கொன்ற போது ஒரு பெரிய கழுகு அங்கு வந்தது. அது கழுகுகளின் ராணி. அது பாலி யிடம், ''அரசே! என் பல குஞ்சுகளைப் பலிவாங்கிய அக்கொடிய பாம்பைக் கொன்று, கடைசியாக மிகுந்த என் இரு குஞ்சுகளைக் காப்பாற்றியதற்கு மிக்க நன்றி. நீங்கள் போகும் வேலை வெற்றி கரமாக முடியும். உங்களுக்கு நானும் என் கூட்டாளிகளாக உள்ள எல்லாப் பறவைகளும் உதவுகிறோம்,'' என்றது.

ஹன்ஸ்தர் பாலியுடன் அங்கிருந்து

கிளம்பி பீராரின் தலைநகர் சந்தாவை அடைந்தது. அங்கு மன்னனின் பூங்கா வில் இறங்கி, சிங்கி சூர்வா இளைப் பாறிய இடத்தை அது பாலிக்குக் காட்டியது.

பாலியும் ''நான் இங்கேயே படுத்து உறங்கி நாளைக் காலையில் அந்த போகிபிலா மன்னனை சண்டைக்கு அழைக்கிறேன்,'' என்றான். அவன் அந்த இடத்தில் தங்கக் கூடாரத்தை அமைத்துப் படுக்க பட்டு மெத்தையை மந்திர சக்தியால் வரவழைத்தான். இருட்டில் தங்கக் கூடாரம் மின்னவே, அதைக் கோட்டையிலிருந்து போகி பிலா மன்னனும் அவனது ஆட்களும் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள்.

அடுத்த நாள் காலை பாலி பீரார் மன்னனை எதிர்க்கத் தயாரானான். அவனது வீரர்கள் வருவது கண்டு பாலி பூங்காவில் கிணற்றை மூடி இருந்த தங்கப் பலகையை எடுத்து சந்தாக் கோட்டைக்குள் விழும்படி வீசி எறிய, அது மன்னனின் தர்பார் மண்டபத்தில் விழுந்து அங்கிருந்த பலரை நசுக்கியது. மன்னன் உடனே பாலியை அடக்கத் தன் படையை அனுப்ப, பாலியும் ஹன்ஸ்த ரும் அப்படையை எதிர்த்து அழித்தனர்.

அதன் பிறகு அவர்கள் கோட்டைக் குள் புகுந்து போகிபிலா மன்னனைத் தாக்கினார்கள். பாலி மன்னனைக் கொல்ல, அம்மன்னனின் வீரர்கள் பயந்து ஓடிவிட்டனர். பாலி ஒருவனைப் பிடித்து மிரட்ட, அவன் சிங்கி சூர்வா இருந்த பாதாளச் சிறையைக் காட்டி னான். தந்தையும் மகனும் சந்தித்து கட்டித் தழுவிக் கொண்டனர். பாலியும் சிங்கியும் போகிபிலாவின் மகள் கைலா வுடன் பாலி நகருக்கு ஹன்ஸ்தரின் மீது அமர்ந்து போய்ச் சேர்ந்தார்கள்.



## பன்னா வைரச் சுரங்கம்

பல நூற்றாண்டுகளாக இந்தியா வைரங்களின் கிடங்காக இருந்து வந்துள்ளது. தென்ஆப்பிரிக்காவில் வைரச் சுரங்கங்கள் கண்டுபிடிக்கும் வரை இந்தியா தான் உலகின் மற்ற நாடுகளுக்கு வைரங்களை அளித்து வந்தது. நம் நாட்டில் அமைக்கப்பட்ட ஒரே வைரச் சுரங்கம் பன்னா மாவட் டத்தில் மஜ்காமில் உள்ளது. இந்தியச் சுரங்க நிறுவனம் இங்கு பத்து லட்சம் காரட் வைரங்கள் புதைந்திருப் பதாகக் கண்டுபிடித்துக் கூறியுள்ளது. இந்த வைரங்களை வெட்டியெடுக்கும் பொறுப்பு இந்திய அரசாங்கத் தாதுப் பொருள் முன்னேற்றக் கழகத்திடம் கொடுக்கப்பட்டுள்ளது. இந்த வைரச் சுரங்கம் அந்த மாவட்டத்தில் 80 கி.மீ. தூரத்திற்குப் பரவிக் கிடக்கிறது.

# நம் இந்தியா

*மற்ற நாடுகளைவிட நம் நாட்டில் தான் பண்டிகைகள் அதிகம் கொண்டாடப் படுகின்றன. உலகத்து மதங்களில் பெரும்பாலானவை நம் நாட்டில் தோன்றியவை. பிற நாட்டு மதத்தவர்களையும் நம் நாட்டில் வரவேற்று இடமும் அளித்திருக்கிறோம். செப்டம்பர், அக்டோபர், நவம்பர் ஆகிய மாதங்களில் பண்டிகைகள் தொடர்ந்து வருகின்றன. எனவே இம்மாத வினாக்கள் பண்டிகைகளைப் பற்றியவை.*

1. தென்னிந்தியாவில் தசராவைக் கொண்டாடும் புகழ்பெற்ற நகரம் எது? அங்கு அப்பண்டிகையின் சிறப்பு அம்சம் என்ன?
2. ஓரிடத்தில் ஆலயத் தேர்களை இழுக்குமுன் ஒரு மன்னர் தெருவைப் பெருக்குகிறார். இது எங்கு நடக்கிறது? இது என்ன விழா?
3. ஒரு மாதத்தில் வரும் இப்பண்டிகையை ஒரு மாநிலத்தில் பட்டங்கள் பறக்கவிட்டும் இன்னொரு மாநிலத்தில் பொங்கலிட்டும் கொண்டாடு கிறார்கள். அந்த இரு மாநிலங்கள் யாவை? அது என்ன பண்டிகை?
4. நபிகள் நாயகத்தின் மகன் ஹுசைன் உயிர் நீத்த நினைவு நாளை முஸ்லிம்கள் கொண்டாடுகிறார்கள். அதன் பெயர் என்ன?
5. ஃபர்வதீன் (ஆகஸ்ட்-செப்டம்பர்) மாதத்தில் வரும் ஜோரோஸ்டரின் பிறந்த நாளை பார்ஸிகள் எந்தப் பெயரில் கொண்டாடுகிறார்கள்?
6. மதுரைச் சித்திரைத் திருவிழாவின் சிறப்பு என்ன?
7. சென்னையில் பிப்ரவரி, மார்ச் மாதங்களில் அலங்கரிக்கப்பட்ட தேர்கள் வர ஒரு கோயிலின் கடவுள் ஊர்வலம் வருகிறார். அது எந்தக் கோயில்? கடவுளின் பெயர் என்ன?
8. ஹோலிப் பண்டிகையை கோவாவில் வேறொரு பெயரைக் கூறுகிறார்கள். அப்பெயர் என்ன?

*(விடைகள் அடுத்த இதழில்)*

## செப்டம்பர் மாத வினாக்களின் விடைகள்

1. மேகநாத் சஹா.
2. பிஷப் காட்டன்.
3. பிரகஸ்பதி.
4. ஆரியபட்டர்.
5. தாமஸ் என்ஜினியரிங் காலேஜ்.
6. ரூர்கி பல்கலைக்கழகம்.
7. அகமதாபாத்தில் உள்ள இண்டியன் இன்ஸ்டிட்யூட் ஆஃப் மேனேஜ்மெண்ட்.
8. கே.எம். பணிக்கர்.



# விநாயகர்

கங்கைக்கும் பார்வதி தேவிக்கு மிடையே மிகுந்த மனக்கசப்பு ஏற்பட்டுவிட்டது. ஒருநாள் நாரதர் பார்வதியிடம், ''தேவி! முப்பத்து முக்கோடி தேவர்களும் ஒருநாள் கங்கையில் போய் நீராடி தம் மகத்தான சக்தியை அதற்கு அளிக்கிறார்கள். நீங்களும் போய் கங்கையில் குளிக்கலாமே. அந்த சக்தியும் கங்கையில் சேர்ந்து மற்ற மக்களுக்குப் பயன்படுமே!'' எனக் கூறிவிட்டுச் சென்றார்.

பிறகு அவர் கங்கையிடம் போய், ''கங்கையே! உன்னைப் பரிசுத்தம் ஆக்குவதற்காகப் பார்வதி வந்து உனது நீரில் குளிக்கப் போகிறாளாம்!'' என்றார். அதுகேட்டு கங்கை, ''அப்படியா சங்கதி? வரட்டும். நான் பார்த்துக் கொள்கிறேன்,'' என ஆத்திரம் பொங்கக் கூறினாள்.

பார்வதி தேவி மலர்களைக் கொண்டு கங்கையைப் பூசித்து நீராட இறங்கினாள். அப்போது கங்கை, ''நில். என்னை அசுத்தப்படுத்தாதே!'' எனக் கூவினாள். இதனால் இருவருக்கும் பெருத்த சண்டை ஏற்பட்டது.

பார்வதி கங்கையைப் பார்த்து, ''நீ கணவன் தலைமீதே ஏறி உட்கார்ந்துவிட்டாய்!'' எனவே, கங்கையோ ''நீயோ அவரை ஏமாற்றி அவரது பாதி உடலையே பறித்துக் கொண்டுவிட்டாயே!'' எனச் சுடச்சுட பதில் கொடுத்தாள்.

பார்வதியோ, ''எல்லோருடைய பாவத்தையும் சுமக்கும் பாவ



மூட்டை நீ!'' எனவே, கங்கை ''நீதான் பாவி. நீ உனக்கென்று ஏதாவது ஒரு குழந்தையாவது பெற்றெடுத்தாயா? குமரன் தீப்பிழம்புகளால் பிறந்தவன். விநாயகரோ அழுக்கில் உருண்டையாகப் பிறந்தவர்,'' என்றாள்.

பார்வதியோ, ''உன்னைப் போல எல்லாருக்கும் பணிபுரிய நான் தயார் இல்லை!'' எனவே, கங்கையும் ஏளனமாகச் சிரித்தவாறே, ''நீ மகாசக்தியல்லவா? உனக்குப் பணிபுரிய ஆயிரம் பேர்கள் கைகட்டி நிற்கிறார்கள் போலிருக்கிறது,'' என்றாள் குத்தலாக. ''ஓ! அப்படியா? என் சக்தியைப் பார்!'' என்று அவள் பயங்கர நடனம் புரியலானாள்.

உலகமே கிடுகிடுத்தது. இருள் கவ்வியது. கடல் அலைகள் கொந்தளித்தன. புயல் வீசியது. இடிஇடித்து மின்னல் வெட்டி அழகான இயற்கை அன்னையே கோர உருவில் காட்சி அளிக்கலானாள்.

அப்போது கங்கை ''இதோ என் சக்தி. நீரையும் அடக்க வல்லது. பார் இதோ!'' எனக் கூறி இமயமலையில் இருந்து தடாலென விழுந்து வெள்ளப் பெருக்கு எடுத்து ஓடினாள். இமயமலைக்குக் கீழ் உள்ள பகுதி வெள்ளக்காடாக ஆகியது.

இதை எல்லாம் கண்ட தேவர்கள், ''இந்த நாரதர் சும்மா இருக்காமல் கங்கைக்கும் பார்வதிக்கும் சிண்டு முடிந்துவிட்டு இப்படி ஓர் அனர்த்தத்தை விளைவித்துவிட்டாரே!'' என அவரைத் திட்டினார்கள்.

அப்போது விநாயகர் தென்பகுதியிலிருந்து திரும்பி வந்தார். வழியில் நாரதரைப் பார்த்து அவர், ''இப்போது திருப்தி தானே உனக்கு? இதனால் மற்றவர்கள் படும் அவதியை நீ ஏன் நினைக்கப் போகிறாய்? உனக்கு வேடிக்கை இருந்தால் போதும்!'' என்றார்.

அதற்கு நாரதர், ''இப்படிப்பட்ட ஆபத்து வேளைகளில் நாயகமாக நின்று உதவினால் தானே ஒருவரது மகிமை வெளிப்படும்,'' என்று கூறியவாறே சென்றார்.

பார்வதியோ, ''இதென்ன விளையாட்டாக ஆரம்பித்த பேச்சு வினையில் போய் முடிந்ததே. இந்த கங்கையை அடக்க இனி வேறொரு பகீரதன் வரவா போகிறான்?'' என்று எண்ணி வருந்தலானாள்.

இது விநாயகருக்குத் தெரிந்து விட்டது. ஆனால் எதுவுமே தெரியா

தவரைப் போலத் தாயாரின் முன் வந்து நின்று, ''அம்மா, ஒரு நல்ல காரியம் செய்யப் போகிறேன். என்னை ஆசீர்வதித்து அனுப்பு!'' என்று வேண்டினார்.

பார்வதியும் ''பேஷ், பேஷ்! எல்லோரும் எந்த வேலையும் தடங்கல் இல்லாமல் நடக்க உன் ஆசிகளை வேண்டுவார்கள். நீ ஏதோ செய்ய என்னிடம் ஆசிகளைக் கேட்கிறாய், ஆமாம். நீ தென்திசையில் சென்று வந்தாயே. அங்கே என்ன விசேஷம்?'' என்று கேட்டாள்.

விநாயகரும் ''விந்திய மலைக்குத் தெற்கே எல்லாம் வறண்டு கிடக்கிறது. நீ அதனைப் பசுமையாக்கி அன்னபூரணி என்ற பெயரைப் பெற்றுக் கொள். அந்த கங்கையைக் கொஞ்சம் தெற்குப் பக்கமாகத் திருப்பி விட்டாலே போதும்,'' என்றார்.

அப்போது பார்வதி, ''நான் என்ன செய்யக் கிடக்கிறது? எல்லாம் உன் தந்தை விசுவநாதரின் பொறுப்பு. அவர் எல்லா உலகங்களுக்குமே அதிபதி,'' என்றாள்.

விநாயகரும், ''இப்படிச் சொல்லி விட்டு நாம் பேசாமல் கைகட்டி உட்கார்ந்துவிட்டால் எப்படி? ஏதாவது முயற்சி செய்ய தானே வேண்டும்?'' என்றார். அதற்கு பார்வதியும், ''ஆமாம். உன் போன்றவர்கள் முயன்றால் எதுதான் நடக்காது?'' என்றாள்.

விநாயகரும் ''அம்மா ! உன் ஆசீர்வாதம் இருந்தால் போதும்,'' எனக் கூறி வணங்கி, பார்வதி தேவியின் ஆசிகளைப் பெற்று அங்கிருந்து



கிளம்பிச் சென்றார். அவர் மேற்கு மலைத் தொடர்ச்சியில் ஆசிரமம் அமைத்துக் கொண்டு வாழும் கௌதமரிடம் கன்றைப் போடப் போகும் நிலையிலுள்ள பசு மாட்டின் உருவில் போனார்.

கௌதமரோ மாடு வந்து புல் மேய்கிறது என நினைத்துத் தம் கமண்டலத்திலிருந்து நீரை எடுத்துத் தெளித்தார். அந்த நீர்த் துளிகள் அந்தப் பசுவின் மீது பட்டதுமே அது துடிதுடித்துக் கீழே விழுந்தது. பசுவைக் கொன்று கௌதமர் தம் தவத்தை எல்லாம் இழந்துவிட்டார். அப்படியும் அவர் தம் கண்களை மூடிக் கொண்டே இருந்தார்.

நாரதர் இந்திரனைத் தூண்டிவிட்டார். இந்திரனுக்கு கௌதமரிடம் தீராத பகை. ஏனெனில் பிரம்மா மிக அழகான பெண்ணான அகலிகை



யைச் சிருஷ்டித்த போது இந்திரன் அவளை மணக்க விரும்பினான். ஆனால் பிரம்மா பூவுலகை ஒரு சுற்று சுற்றி முதலில் வருபவனுக்கே அகலிகை எனக் கூறி ஒரு போட்டியை ஏற்படுத்தினார். அதில் மற்றவர்களோடு இந்திரனும் கலந்து கொண்டு உலகைச் சுற்றிவரக் கிளம்பினான்.

போட்டிக்கு வந்த கௌதமரோ கன்று போட்டுக் கொண்டிருக்கும் ஒரு பசு மாட்டைச் சுற்றிவிட்டு எல்லோருக்கும் முன்னதாக வந்து பிரம்மாவிடம் தாமே முதலில் உலகைச் சுற்றி வந்தவர் எனக் கூறி அவரை தன் வாதத்தை ஏற்கும்படி செய்தார். பிரம்மாவும் அகலிகையை கௌதமருக்கே மணமுடித்து வைத்தார்.

எந்தப் பசுவை கௌதமர் பூதேவிக்குச் சமம் என்று பிரம்மாவிடம் கூறினாரோ அதனையே அவர் இப்போது கொன்றுவிட்டார். இதுவே தக்க தருணம் என இந்திரன் எண்ணி ஒரு முனிவர் போல வேடம் பூண்டு எல்லா இடங்களுக்கும் போய், "கௌதமர் ஒரு பசுவைக் கொன்று விட்டார். மகாபாவி. அவரது ஆசிரமமே அதனால் புனிதத் தன்மையை இழந்துவிட்டது. அங்கே யாராவது அடி எடுத்து வைத்தால் கூட பாவம் பற்றிக் கொண்டுவிடும். கங்கை நீரை இறந்து விழுந்து கிடக்கும் பசுவின் மீது பாய்ந்து ஓடச் செய்தால் அது பிழைத்து எழும்," என்று பறை சாற்றினான்.

எந்த முனிவரும் கௌதமரைக் காண விரும்பாமல் பகிஷ்கரிக்கலாயினர். கௌதமரது ஆசிரமவாசிகளும் அவரை விட்டுப் போய்விட்டார்கள். வடக்கே இமயத்தில் உள்ள கங்கையை மேற்குத் தொடர்ச்சி மலை உள்ள பகுதிக்கு வந்து எப்படி பாயச்செய்வது? கங்கையை வேண்டி அங்கே வரவழைக்க கௌதமர் இமயமலைக்குப் போய் தவம் செய்யலானார்.

பகீரதன் தன் முன்னோர்கள் நற்கதி பெற வேண்டும் என்பதற்காக தவம் செய்து கங்கையை பூவுலகிற்குக் கொண்டு வந்தான். சிவபிரான் கங்கையின் வேகத்தைத் தம் சடைகளில் அடக்கி பிறகு வெளியே விட்டார். அது இமயமலை வழியாக இறங்கி சமவெளிக்குப் பாய்ந்து பகீரதனின் பின்னால் போய் முடிவில் கடலில் கலந்தது.

பகீரதனின் பின்னால் கங்கை

சென்றபோது, தன் ஆசிரமத்தை அது நாசப்படுத்திவிடப் போகிறதே என எண்ணியவாறே ஜஹ்னு என்ற முனிவர் அதனைத் தடுத்து உள்ளங்கையில் எடுத்து உறிஞ்சிக் குடித்துவிட்டார்.



கங்கை தடுக்கப்பட்டது கண்டு பகீரதன் அந்த முனிவரை வேண்டி அவரிடமிருந்து கங்கையை அவரது காது வழியே வெளியே வரச் செய்தான். பகீரதன் கொண்டு வந்த தால் பாகீரதி என்றும் ஜஹ்னு முனிவர் காதிலிருந்து வந்ததால் ஜான்ஹவி எனவும் கங்கை பெயர் பெற்றது. கௌதமரின் பின் கங்கை சென்றாள். வழியில் பல கிளை நதிகள் ஏற்பட்டன.

கௌதமர் ஆசிரமத் திற்குப் போய் கங்கை விழுந்து கிடந்த பசுவின் மீது பாய்ந்து ஓடினாள். கௌதம ரின் ஆசிரமத்திலிருந்து வந்ததால் கௌதமி என்ற பெயரும் ஏற்பட்டது. பசுவோ உயிர் பெற்று ஆகாயத்தில் கிளம்பிப் போய் விநாயகராக உரு மாறி, ''அம்மா, கங்கையே! என்னை மன்னித்துவிடு. உன் அமிர்தமயமான நீரை விந்திய மலைக்குத் தெற்கில் உள்ளவர்களும் ருசித்துப் பயன்பெற வேண்டும் என்றே இவ்வாறு செய் தேன். தட்சிண கங்கையாக அவதரித்த நீ பசுவை அதாவது கோமாதாவை உயிர்ப்பித்தாய். எனவே உனக்கு கோதாவரி என்ற பெயர் ஏற்படட் டும்,'' என்று கூறி மறைந்தார்.

கோதாவரி பல உபநதிகளைச் சேர்த்துக் கொண்டு கிழக்கு நோக்கிப் பாய்ந்து அப்பகுதியை செழிப்பாக் கியது. சப்தரிஷிகளும் தேவர்களும் அந்நதியில் நீராடினார்கள். அது கிழக்காகப் பாய்ந்து முடிவில் கடலை அடைந்தது.

கங்கை கோதாவரியாக மாறிப் பாய்ந்தபோது கங்கையின் கூந்தல் சற்று மேற்குப் புறமாக விழுந்தது. விஷ்ணு தன் கைவிரலால் அக் கூந்தலின் சிக்கை எடுத்துவிடவே அது சற்றுத் தள்ளி விழுந்து கிருஷ்ண வேணி, கிருஷ்ணா நதி எனப் பெயர் பெற்று இன்னொரு நதியாகியது.

கங்கை ஆகாயத்தில் எழுந்து கிளம்பியபோது அதன் துளிகள் மேலும் தெற்கேயுள்ள கவேர மகா முனிவரின் ஆசிரமத்திலுள்ள கமண் டலத்தில் போய் விழுந்தது. அது ஒரு கன்னிப் பெண்ணாக வளர்ந்து அகத் திய முனிவரோடு காட்டில் திரிந்து

காவேரி என்ற பெயரில் ஓடிக் கடலை அடைந்தது.

இவ்வாறு கௌதமர் அழைத்து வந்த கங்கை தென்பகுதியில் மூன்று பெரிய புண்ணிய நதிகளாகி அப் பகுதிகளை வளமிக்கதாகச் செய்தது. நதிகளில் நீராடப் போவோர் ஏழு நதிகளில் கங்கை, கோதாவரி, கிருஷ்ணா, காவேரி என்பனவற்றை யும் சேர்த்துக் கூறி ஸ்நானம் செய்வது வழக்கமாகிவிட்டது.

கௌதமரின் ஆசிரமம் மீண்டும் களைகட்டிவிட்டது. கோதாவரி நதிக் கரையில் பல புண்ணிய க்ஷேத்திரங் கள் தோன்றின. கௌதமர் மற்றொரு பகீரதனாகப் போற்றப்பட்டார். இந் திரன் கூட கௌதமர் செயற்கரிய செயலைச் செய்தார் எனப் புகழ்ந்து, தான் அவர் மீது துவேஷம் காட்டிய தற்காகத் தன்னை மன்னிக்கும்படி வேண்டினான்.

கௌதமர் மனம் தான் ஒரு நிலை யில் இல்லை. தன் மனைவி அகலி கையை கல்லாகும்படி சபித்துவிட்டு வந்து தனியே வாழ மேற்குப் பகுதி யில் ஆசிரமத்தை அமைத்திருந்தார். கோதாவரி வந்ததிலிருந்து அப்பகுதி யில் மக்கள் நடமாட்டம் அதிகமாகி அவரது தனிமையையும் அமைதி யான சூழ்நிலையையும் சீர்குலைத்து விட்டது. பல ஆசிரமங்கள் வேறு தோன்றின.

அத்திரி அனுசூயை அங்கு வாழ அவர்களது புண்ணிய பலத்தால் மேலும் அப்பகுதி வளமுற்றது. கௌதமருக்கும் தன்னோடு அக லிகை இல்லையே என்ற குறை மனதை வாட்டியது. தான் அவசரப் பட்டு தீர விசாரிக்காமல் அகலி கையை சபித்ததற்காக அவர் தன்னைத் தானே நொந்து கொண்டார்.

அப்போது விநாயகர் அவர் முன் தோன்றி ''கௌதமரே! விரைவி லேயே விஷ்ணு ராமராக அவதரித்து அகலிகைக்கு சாப விமோசனம் அளிக் கப் போகிறார். கோதாவரி இங்கு வந்ததால் உமக்கு ஏற்பட்ட கஷ்டங் கள் விரைவில் மறையப் போகின் றன,''' என்றார்.

கௌதமரும், ''விநாயகரே! எல் லாம் உன் திருவிளையாடல் தான்!'' எனக் கூறி அவரை வணங்கி நின்றார்.





# மனைவி அமைந்த விதம்

முத்தைய்யாவும் மரகதமும் தம்பதிகள். அவர்களுக்கு அவர்களது பேரனான சிதம்பரத்தை வளர்க்க வேண்டியதாயிற்று. ஏனெனில் அவர்களது ஒரே மகனும் மருமகளும் ஒரு விபத்தில் மாண்டு போனார்கள். அவர்களது மகன் தான் சிதம்பரம். அவனை அருமைபெருமையாக வளர்த்தார் முத்தைய்யா. அவனும் பெரியவனாகி நன்கு படித்து ஊராரிடம் நல்ல பெயரும் பெற்று விட்டான்.

சிதம்பரம் தினமும் அவ்வூர்க் கோயிலுக்குப் போய் வருபவனாதலால் கோயில் அர்ச்சகர் நடராஜ குருக்களுக்கு சிதம்பரத்தை மிகவும் பிடித்துப் போயிற்று. தினமும் அவர் அவனுடன் ஏதாவது பேசிக் கொண்டிருப்பது வழக்கம்.

ஒருநாள் தன் தாத்தாவுடன் கோயிலுக்குச் சென்ற சிதம்பரம் வழக்கம் போல கோயில் குருக்களிடம் பேசச் சென்றான். அவனுடன் முத்தைய்யாவும் போனான்.

சிதம்பரத்தைப் புன்சிரிப்போடு வரவேற்ற குருக்கள் முத்தைய்யாவின் முகம் 'கடுகடு' என்று இருப்பதைக் கண்டார். அதனால் அவர் அவனிடம் ''ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்? ஏதாவது கோபமா?'' என்று கேட்டார். அதற்கு அவன் ''எல்லாம் உங்கள் அருமை சிதம்பரத்தையே கேளுங்கள்,'' என்றான்.

குருக்களும் சிதம்பரத்திடம், ''என்னப்பா விஷயம்? ஏன் உன் தாத்தா கோபத்துடன் இருக்கிறார்?'' என்று கேட்டார். சிதம்பரமும் ''அவர் எனக்குக் கல்யாணம் செய்து வைத்துவிட வேண்டும் என்று துடியாய்த் துடிக்கிறார். அவர் பார்த்த பெண்களின் லட்சணத்தைக் கேளுங்கள்,'' என்றான். முத்தைய்யாவோ, ''நான்

- கௌரிநாதன் -



சொல்லமாட்டேன். அவனே தன் வாயால் எல்லாம் சொல்லட்டும்,'' என்றான்.

அப்போது குருக்கள், ''தாத்தாவும் பேரனும் இப்படிப் பிடிவாதம் பிடித்தால் யாருக்கு என்ன தெரியும்? சிதம்பரம்! விஷயத்தை நீயே சொல்லிவிடு!'' என்றார்.

சிதம்பரம் ''ஐயா! இவர் எனக்குத் திருமணம் செய்து வைப்பதற்காக என்னைப் பெண்களைப் பார்க்க அழைத்துச் சென்றார். நான் பார்த்த பெண்களில் அழகாக இருந்தால் அறிவு இல்லை. அறிவிருந்தால் அழகு இல்லை. அறிவும் அழகும் இருந்தால் நற்குணங்கள் இல்லை. அழகும் அறிவும் குணமும் இருந்தால் மண்டைக் கர்வம் கொண்டவளாக இருக்கிறாள். நீங்களே சொல்லுங்கள். இப்படிப்பட்ட பெண்களில் நான் யாரைத்தான் தேர்ந்தெடுக்க முடியும்?'' என்றான்.

குருக்களும் ''நீ சொல்வது சரியே. ஆனால் உனக்கு என்று ஒருத்தி இனிமேலா பிறக்கப் போகிறாள்? பிறந்து எங்கேயாவது இருப்பாள். பகவானின் அருளால் உனக்குக் கிடைப்பாள்,'' என்று கூறிக் கொண்டிருக்கும் போதே சுப்பைய்யா என்பவன் வந்து அவரை வணங்கி ஒரு தார் ரஸ்தாளி வாழைப்பழத்தை வைத்தான். அவனோடு இளம்பெண் ஒருத்தியும் வந்திருந்தாள்.

குருக்களும் அவர்களைப் பார்த்தவாறே, ''சுப்பைய்யா! என்ன விசேஷம்? திடீரென என்னைப் பார்க்க வந்து இந்த வாழைப்பழக் குலையை வேறு கொடுக்கிறாய். கூடவே இளம் பெண் ஒருத்தியையும் அழைத்து வந்திருக்கிறாய். உன் நோக்கம் என்ன?'' என்று கேட்டார். அவனும் ''இவள் என் தம்பியின் மகள். பெயர் சிவகாமி. நல்ல புத்திசாலி. சுறுசுறுப்பானவள். எதையும் விரைவில் சரியாகச் செய்துவிடுபவள். இவளுக்கு விரைவில் நல்ல அறிவாளியான கணவன் கிடைக்க வேண்டும் என்று நீங்கள் ஆசீர்வதிக்க வேண்டுகிறேன்,'' என்றான்.

குருக்களும் சிரித்தவாறே, ''நீ வந்த வேளை மிகவும் நல்ல வேளை. இங்கு அறிவாளியான இளைஞன் ஒருவன் இருக்கிறான். அவனையும் இந்தப் பெண்ணையும் பேசவிட்டுப்

பரீட்சிக்கலாமா?'' என்று கூறி சிதம்பரத்தையும் பார்த்தார்.

அவர்களும் பரீட்சைக்குத் தயார் என்பது போலத் தலையை ஆட்டினார்கள். உடனே சிதம்பரம் அவளைப் பார்த்து, ''உங்கள் வீட்டிலுள்ள கதவுகளெல்லாம் சிறியவையா?'' என்று கேட்டான். முத்தைய்யாவும் சுப்பைய்யாவும் இது என்ன கேள்வி என்று எண்ணி ஆச்சரியப்பட்டனர்.

சிவகாமியோ, ''எங்கள் குடும்பம் விவசாயக் குடும்பம். உடல் உழைப்பை நம்பியிருக்கும் விவசாயிகளின் வீடுகளிலெல்லாம் கதவுகள் அகலமாக இராமல் சிறியனவாகவே இருக்கும். எங்கள் வீடு கூட உங்கள் வீட்டைவிடச் சிறியதாகத் தான் இருக்கும்,'' என்றாள்.



சிறுவயது முதல் முத்தைய்யா சிதம்பரத்திற்கு அளவிற்கு அதிகமாகவே வேளாவேளைக்கு உணவு அளித்து வந்ததால் அவன் சற்றுப் பருத்தே இருந்தான். இது அவனது சுகவாழ்வைக் காட்டுவதாக இருந்தது.

அவன் சிவகாமியின் பதிலைக் கேட்டு திருப்தியுடன் புன்னகை புரிந்தவாறே, ''காலையில் ஒரு குடம் நிறையத் தண்ணீர் கொடுத்தால் மாலைக்குள் அது முழுவதும் செலவாகிவிடுமா? அல்லது அப்படியே இருக்குமா?'' என்று கேட்க, சிவகாமி ''அந்தத் தண்ணீரை வீணாக்காமல் தேவைக்குத் தக்கபடி பயன்படுத்தி குடத்தில் பாதிநீர் இருக்கச் செய்வேன்,'' என்றாள்.

இந்த பதிலிலிருந்து அவள் ஊதாரித்தனமாகவோ அல்லது மிகவும் கஞ்சத்தனமாகவோ இல்லாமல் தேவைக்கு ஏற்ப குடும்பச் செலவு செய்பவள் என்று சிதம்பரம் தெரிந்து கொண்டான்.

அடுத்து அவன் ''எதற்கும் பயன் படாத கிழ மாடுகளை என்ன செய்யலாம் என்று கூற முடியுமா?'' என்று கேட்டான். அவளும் ''எந்த உயிரினமும் கிழப் பருவத்தை அடைவது என்பது இயல்பே. அவை இளமையாய் இருந்தபோது நமக்குச் செய்த வேலைகளை எண்ணிப் பார்த்து அவற்றை முதுமையிலும் பாதுகாத்து வரவேண்டும்,'' என்றாள்.

அவளது அந்த பதிலால் தான் அந்தப் பெண்ணை மணந்து கொண்டால் தன்னுடைய வயதான தாத்தாவையும்

பாட்டியையும் எந்தக் குறைவும் இன்றி நன்கு கவனித்துக் கொள்வாள் என்று தெரிந்து கொண்டான்.

''இன்னொரு கேள்வி. ஒன்றோடு ஒன்றைச் சேர்ப்பது சரியா? ஒன்றோடு பல சேர்ப்பது சரியா அல்லது ஒன்றோடு எதையும் சேர்க்காமலேயே இருப்பது சரியா?'' என்று கேட்டான். சிவகாமியும் ''ஒன்று பெரிதாக இருந்தால் அதனுடன் எதையும் சேர்க்கத் தேவை இல்லை. கடவுளானால் தான் ஒன்றுடன் பத்தைச் சேர்க்கலாம்,'' என்றாள்.

அவர்கள் இருவரும் பேசியது எதுவுமே முத்தைய்யாவுக்கும் சுப்பைய்யாவுக்கும் புரியவில்லை. குருக்களோ புன்னகை புரிந்து, ''உங்கள் இருவருக்கும் இதெல்லம் புரியவில்லையா? சிதம்பரம் தன் முதல் கேள்வியில் சிவகாமியின் குடும்பம் எப்படிப்பட்டது என்று கேட்க, அவள் தன்னுடையது சிறிய விவசாயக் குடும்பம் என பதில் சொன்னாள்.

அடுத்ததாக நிறைகுட நீர் பற்றிக் கேட்டான் சிதம்பரம். அதற்கு சிவகாமி தான் எப்படி சிக்கனமாகக் குடித்தனம் செய்து மிச்சப்படுத்துவாள் என்பதை தெளிவாகக் கூறினாள்.

மூன்றாவது கேள்வி கிழட்டுத்தனம் பற்றியது. முதுமை அடைந்தவர்களை ஒதுக்கிவிடாமல் நன்கு கவனித்துக் கொள்ள வேண்டும் என்று சிவகாமி கூறியதால், அவள் தன் தாத்தாவையும் பாட்டியையும் நன்கு கவனித்துக் கொள்வாள் என்பதை அவன் தெரிந்து கொண்டான்.

ஒன்றோடு எத்தனை சேர்ப்பது என்ற வினாவிற்கு ஒன்று என்றால் வீட்டுப் பெரியவர் என்றும், அவர் சொல்லுக்கு மறுசொல் கூறாமல், வாதம் புரியாமல் கீழ்ப்படிய வேண்டும் என சிவகாமி பதில் கூறினாள். இதை எல்லாம் பார்த்தால் இவர்கள் கணவன் மனைவியாகத் தகுந்தவர்கள் என்பது தெரிகிறது. இவர்களுக்கு விரைவில் திருமணம் செய்து வைக்கிறீர்களா?'' என்று கேட்டார்.

முத்தைய்யாவும் சுப்பைய்யாவும் மகிழ்ச்சியுடன், ''ஆகா! நீங்கள் கூறிய படியே செய்கிறோம்,'' என்றனர். விரைவில் சிதம்பரம் சிவகாமியை மணந்து கொண்டான்.





# மானம் காத்த மங்கை!

விசாலம் தன் கணவனை அலுவலகத்திற்கு அனுப்பியபின் தானும் சாப்பிட்டுவிட்டுத் தன் அறைக்குப் போய்ப் படுத்துக் கொண்டாள்.

கண்ணை மூடிக் கொண்டிருந்தாலும் அவள் தூங்கவில்லை. அப்போது தன் அறைக்குள் யாரோ பூனைபோல சத்தமிடாமல் நடந்து வருவது கண்டு மெதுவாகக் கண்ணைத் திறந்து அவள் அப்படி வருவது யாரென்று பார்த்தாள். அவளது நாத்தனார் விமலாவின் கணவன் தான் வந்தவர் எனக் கண்டு ஆச்சரியப்பட்டு அவர் என்ன செய்கிறார் என்று ஓரக் கண்ணால் பார்க்கலானாள்.

விமலாவின் கணவன் நாகசாமி மேஜை மீதிருந்த விசாலத்தின் பெட்டியைத் திறந்தான். அதனுள் துணிகளுக்கு அடியில் வைக்கப்பட்டிருந்த பத்து பவுன் தங்கச் சங்கிலியை எடுத்து அவன் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டான். அதன்பிறகு மெதுவாகப் பெட்டியை மூடிவிட்டு தான் வந்தது போலவே திரும்பச் சென்றுவிட்டான்.

விசாலத்தின் கணவன் ரகுபதிக்கு அவனது அக்கா விமலாவைத் தவிர கூடப் பிறந்தவர் என்று வேறு யாரும் இல்லை. அவள் கணவன் தான் நாகசாமி. மிகவும் நல்லவனே. அப்படிப்பட்டவன் ஏன் தங்கச் சங்கிலியைத் திருடி எடுத்துச் செல்ல வேண்டும் என்று விசாலம் யோசிக்கலானாள். அதைக் கண்டுபிடித்துவிட வேண்டும் என்று அவள் தீர்மானித்துக் கொண்டாள்.

மாலை தன் கணவன் வந்ததும் விசாலம் தன் பெட்டியை எதற்கோ திறப்பது போலத் திறந்து எதையோ தேடுவது போலத் தேடிவிட்டு,

- ரேணுகா ரவி -



''ஐயோ! என் தங்கச் சங்கிலியைக் காணவில்லையே!'' என்று அலறி னாள். அதைக் கேட்டு வீட்டிலிருந்த எல்லோரும் அங்கு ஓடிவந்துவிட் டார்கள். தங்கச் சங்கிலியைக் காண வில்லை என்றதும் எல்லோரும் எல்லா இடங்களிலும் தேடலானார் கள். விசாலமும் அவர்களோடு சேர்ந்து தேடலானாள்.

முடிவில் விசாலம், ''எனக்குக் கடவுள் மீது முழு நம்பிக்கை உள்ளது. காணாமல் போன சங்கிலியை எப் படியாவது எனக்குக் கிடைக்கச் செய்துவிடுவார்,'' என்று கூறி, பூஜை அறைக்குள் போய் உட்கார்ந்து கண்களை மூடிக் கொண்டு ஏதோ பிரார்த்தனை செய்தாள்.

இதற்குப் பத்து நாட்களுக்குப் பின் அவளது வீட்டு வாசல் கதவை யாரோ தட்டவே, விசாலத்தின் கணவன் வாசலுக்குப் போய் வந்தது யாரென்று பார்த்தான். ஒரு கிழச் சன்னியாசி அங்கு நின்று கொண்டிருந்தார். அவர் ''ரகுபதி! நான் உள்ளே வரலாமா?'' என்று கேட்டார். அப்போது நாகசாமி ஓடிவந்து அந்த சன்னியாசியை மரியாதையுடன் உள்ளே அழைத்துச் சென்றான்.

அவர் நாகசாமியை சுட்டு எரித்து விடுபவர் போலப் பார்த்தவாறே, விசாலத்தைக் கண்டு ''அம்மா, விசா லம்! உன் பிரார்த்தனையைக் கேட்டு பகவான் என்னை இங்கே அனுப்பி இருக்கிறார். உன் பிறந்த வீட்டில் உனக்குப் போட்ட விலை உயர்ந்த நகை ஏதாவது காணாமல் போயிருக்க வேண்டுமே!'' என்றார். விசாலம் 'ஆம்' என்பது போலத் தலையை ஆட்டினாள்.

அப்போது சன்னியாசி, ''காணா மல் போன உன் நகை இரண்டொரு நாட்களில் உன் பெட்டிக்கே வந்து சேரும். நான் நாளை மறுநாள் மீண் டும் வருவேன். உனக்கு என் நல்லாசி கள்!'' என்று கூறிவிட்டு நாகசாமி யிடம், ''நீ மட்டும் இப்போது என் னுடன் வா!'' என்றார். அவனும் அவரோடு வெளியே சென்றான். அதற்கு அரைமணி நேரத்திற்குப் பின் அவன் மட்டும் வீட்டிற்குத் திரும்பி வந்தான்.

அன்று மாலை விசாலம் தன் பெட்டியைத் திறந்து பார்த்து, ''ஆகா! காணாமல் போன தங்கச் சங்கிலி

கிடைத்துவிட்டது. இதோ என் பெட்டிக்குள் வந்திருக்கிறதே!'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினாள். அதுகேட்டு எல்லோரும் அங்கு வந்து பார்த்து ''சன்னியாசி கூறியபடியே நடந்துவிட்டதே!'' என்று கூறி ஆச்சரியப்பட்டார்கள்.

மூன்றாவது நாள் அந்த சன்னியாசி வரவே எல்லோரும் கூடி வரவேற்றார்கள். அவரும் எல்லோரையும் உட்காரச் சொல்லி, ''ஒரு வீட்டில் இல்லத்தரசியான மனைவி தன் கணவனுக்கு நல்லதைச் சொல்ல வேண்டும். விமலாவுக்கும் விசாலத்திற்கும் மட்டும் இந்த அறிவுரை அல்ல. நாகசாமிக்கும் ரகுபதிக்கும் சேர்த்துத் தான்,'' என்றார். பிறகு அவர்களுக்கு ஆசிகளை அளித்துவிட்டு அவர் சென்றார்.

அன்றிரவு ரகுபதி விசாலத்திடம், ''இன்று வந்த சன்னியாசிக்குத் தான் என்ன சக்தி? அவர் சொன்னபடியே தங்கச் சங்கிலி பெட்டிக்குள் வந்துவிட்டதே!'' என ஆச்சரியத்துடன் கூறினான். விசாலமும் ''அந்த சன்னியாசி சக்தி வாய்ந்தவரா? இல்லை. அவர் என் மாமா. நாடக நடிகர் நல்லக்கண்ணு. நான் சொல்லித் தான் அவர் சன்னியாசி வேடத்தில் இங்கு வந்தார். அதற்குக் காரணம் உங்கள் சகோதரியின் கணவர் நாகசாமி தான். ஒருநாள் பகலில் நான் தூங்குவதாக நினைத்து அவர் என் அறைக்கு வந்து என் பெட்டியிலிருந்து தங்கச் சங்கிலியை எடுத்துத் தன் சட்டைப் பைக்குள் 'போட்டுக் கொண்டு போய்விட்டார். நல்லவரான நாகசாமி இப்படிச் செய்யக் காரணம் உங்கள் சகோதரி விமலா தான். நாகசாமியின் பெயர் கெடாமலும், அதற்கு விமலா தான் காரணம் என்பது வெளிவரக் கூடாது என்பதற்காகவும் தான் என் மாமாவை சன்னியாசி வேடத்தில் வந்து நாகசாமிக்கு அறிவுரை கூறச் சொன்னேன். அவரும் நாகசாமிக்கு அறிவுரை கூறித் தங்கச் சங்கிலியை என் பெட்டியில் வைக்கச் செய்தார். இதனால் அவர்களது இருவர் மானமும் போகாமல் தப்பியது,'' என்றான்.

ரகுபதியும் அதைக் கேட்டு விசாலத்தைப் பாராட்டி அவள் செய்தது முற்றிலும் சரி என்று கூறினான்.




LET'S CELEBRATE NOVEMBER
OUR SPECIAL MONTH
WATCH OUT FOR THE
CHILDREN'S SPECIAL ISSUE
OF CHANDAMAMA IN NOVEMBER 2002

## இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள் - 13

**நம் புராணங்களில் கூறப்பட்டுள்ள இளைஞர்களான மாவீரர்கள் சிலரைப் பற்றியது இது. அவர்களை அறிவீர்களா?**

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***



1 நான் என் சிற்றப்பா பெரியப்பாக்களுக்கு போரில் படையை நடத்தி சக்கர வியூகத்துள் சென்று உதவினேன். ஆனால் அதிலிருந்து வெளியே வரத் தெரியவில்லை. நான் யார்?

---

2 பகவான் விஷ்ணு அளித்த வரத்தால் நான் ஆகாயத்தில் மிக்க ஒளிவிடும் நட்சத்திரமாக ஆனேன். நான் யார்?

---

3 என் தந்தை என்னை பலிக்குக் கொடுத்த பிறகு நான் எமதர்மனிடமிருந்து பிறப்பு, இறப்பின் ரகசியங்களைத் தெரிந்து கொண்டேன். நான் யார்?

---

4 பார்வையற்ற என் பெற்றோர்களை நான் என் தோளில் சுமந்து செல்கையில் ஓர் அரசகுமாரன் இருட்டில் என் மீது அம்பை எய்துவிட்டான். நான் யார்?

---

5 என் தந்தை என்னைக் கொல்ல பல முறை முயன்றபோதெல்லாம் நான் பக்தியுடன் வழிபட்ட பகவான் என்னை காப்பாற்றினார். நான் யார்?

---

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த புராண மாவீரர் ........................................

........................................

........................................

போட்டியாளரின் பெயர்: ..............................

வயது: .................. வகுப்பு: ..............................

முகவரி: ..............................

..............................

பின்கோடு: ........................ போன்: ..............................

போட்டியாளரின் கையொப்பம்: ..............................

பெற்றோரின் கையொப்பம்: ..............................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

### இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி - 13
### சந்தமாமா இந்தியா லிமிடெட்

நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி நவம்பர் 5, 2002

நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டுமே.
2. * எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

அம்புலிமாமாவின்
அன்பளிப்பு

# வீர தீர பராக்கிரமன் 19

ஓவியம் : பாணி

சேனாதிபதி நரேந்திரதேவன் தாந்திரீகன் நாகபந்து கூறுவதை எல்லாம் செய்யத் தயாரானான். அவன் கூறியபடி மந்திரவாதி சாந்தினி நதிக்கரைக்குப் போய் அங்கிருந்த ரவீந்திரதேவனைப் பாதுகாப்பிற்காக அழைத்து வந்தான். சந்திரபுரியில் ஆதித்தன் தன் ஆட்களோடு போய் அரண்மனையைச் சுற்றி வளைத்துத் தன் வசப்படுத்திக் கொண்டான்.

ஆதித்தன் தன் ஆட்களு டன் அரண்மனைக்குள் சென்றான்.

முதலில் ரவீந்திரதேவனால் சிறைப்படுத்தப்பட்ட நம் வீரர்களை விடுதலை செய்யுங்கள். அவர்கள் அரண்மனையைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்கட்டும்.

ஆதித்தன் அரண்மனையில் தன் அறைக்குச் சென்றான். கருட விக் கிரகத்தின் முன் பக்தி சிரத்தை யுடன் அமர்ந்து கொஞ்ச நேரம் தியானம் செய்தான். அப்போது...

அப்போது குகைக் கோவிலுள் நரேந் திரதேவனும் ரவீந்திரதேவனும் தாந் திரீகனின் உதவியுடன் ஏதேதோ செய் வதை எல்லாம் ஆதித்தன் தன் மனக் கண்ணால் கண்டான்.


அரண்மனைக்கு வெளியே திடீரென மேள, தாள, வாத்திய சத்தம் கேட்கவே, ஆதித்தனின் தியானம் கலைந்தது. அவன் கண்களைத் திறந்தவாறே மன்னர் வந்துவிட்டார் என்று தெரிந்து கொண்டான்.
ஆதித்தன் பரபரப்புடன் அரண்மனை வாசலுக்குச் சென்றான்.
அருணா! நீ முதலில் செல்!
ரதம் என் பின்னாலேயே வருகிறது, அரசே!


மன்னரைக் காண, அவரது குரலைக் கேட்க மக்கள் கூடினர்.
நரேந்திரதேவனையும் ரவீந்திரதேவனையும் ராஜத்துரோகிகள் என அறிவிக்கிறேன். அவர்கள் சந்திரபுரியிலிருந்து தப்பி ஓடிவிட்டனர். அவர்களை எப்படியும் பிடிக்க வேண்டும்.


மலைக் குகையில் தாந்திரீகன் ரவீந்திர தேவனுக்கு ஆறுதல் கூறினான்.
பயம் வேண்டாம். இங்குள்ள வரை உங்களை யாரும் எதுவும் செய்ய முடியாது.


மேலும் இவர் சக்தியை உபாசனை செய்து சிறப்பான யாகத்தைச் செய்யப் போகிறார்.
அதன் காரணமாக ஆதித்தன் அந்த சக்திக்குக் கட்டுப்பட்டு விடுவான்.
தாந்திரீகனின் யாகத் தீயிலிருந்து ஒரு விசித்திர உருவம் ஒருவித ஒலியை எழுப்பிக் கொண்டு வரவே, மந்திரவாதி அதை கவனிக்கலானான்.



உடன்பிறப்பே! ஆசிகள் பெற்றுத் துளிர்த்து வரும் நம் எதிரிகளை இப்போதே நசுக்க வேண்டும். இது நம் எஜமானருக்குச் செய்யும் தலையாய கடமை.
அவன் சந்திரபுரியில் இருக்கிறான். வரும் பௌர்ணமிக்குள் அவனை என் முன் கொண்டு வா! அப்போது என் யாகத்தை வெற்றிகரமாக முடிப்பேன்.




அப்படியே செய்கிறேன், குருவே! ஆனால் அவனுக்கு அடங்கிய கருடனின் இறகு எனக்குக் கிடைக்க வேண்டும்.




அவனை முதலில் உன் வசப்படுத்திக் கொள். அந்த இறகு உன்னை அழிப்ப தற்குள் நீ அதனை ஒரேயடியாக ஒழித்துவிட வேண்டும்.
அந்த இளைஞனைப் பந்தாடி விடுகிறேன்.




ற் பெருமையடிக்கு
வீந்திரதேவனால் பேசாம
ருக்க முடியவில்லை.
அந்த அற்பப் பயலுக்காக என் சக்தியை ஏன் வீணாக்குவேன்? எனக்கு உத்தரவு கொடு. இப்போதே அந்த ஆதித்தனை இழுத்துக் கொண்டு வந்து நிறுத்துகிறேன்.




அவனது ஜம்பம் தாந்திரீகனுக்கு எரிச்சலை மூட்டியது. அவன் திரும்பியவாறே நரேந்திர தேவனைப் பார்த்தான்.
நம் ஆட்களை ஒன்றாகச் சேர்த்துக் கொள். இந்த ராட்சஸன் ஆதித்தனை வசப்படுத்தும் போது, மன்னரின் படைகளை ஒழிக்க வேண்டும்.


குகைக்குள் போகுமுன் தாந்திரீகன் மந்திரவாதியிடம் பேசினான்.
வீண் ஜம்பம் பேசி ஆபத்தை வரவழைத் துக் கொள்ள வேண்டாமென்று ரவீந்திரதேவனுக்கு எச்சரிக்கை செய்.
சந்திரபுரியில்...
ஆதித்தா! இனி நாம் என்ன செய்ய வேண்டும்?


ஆதித்தன் தன் ஆட்களுக்கு விவரமாகக் கூறினான்.
நாம் அந்த ராஜத் துரோகிகளைப் பிடிக்க வேண்டும். அவர்கள் இப்போது சர்ப்ப தேச மலைக் குகையில் ஒளிந்து கொண்டிருக்கிறார்கள்.
மன்னர் ஆச்சரியம் அடைகிறார்.
ஆ! சர்ப்ப தேசமா? அங்கு கொடியவனான தாந்திரீகன் ஒருவன் மலைவாசிகளின் தலைவர்களைத் தன்வசப்படுத்தி உள்ளானே!


அது மிக ஆபத்தான வேலை!
அதைவிட ஆபத்தானது எதிரிகளை அடக்கும் வேலை தானே, அரசே! நீங்கள் அனுமதித்தால்...
தாந்திரீகனை செயலிழக்கச் செய்து, நரேந்திரதேவனும் ரவீந்திரதேவனும் தப்பி ஓடிவிடாதபடி தடுப்போம். என் ஆட்கள் அதற்குத் தயாராக இருக்கிறார்கள்.
தொடரும்

# கேளிக்கை நேரம்

## வண்ணம் தீட்டுதல்

இங்கு ஓர் அழகிய இயற்கைக் காட்சியின் படம் உள்ளது. இதற்கு வண்ணங்கள் தீட்டி மேலும் பொலிவுறச் செய்யுங்கள். இது உங்கள் வண்ணம் தீட்டும் திறமையை வெளிப்படுத்த நாம் அளிக்கும் வாய்ப்பு. ஆரம்பியுங்கள்.





## ஒரே கோட்டுப் படம்

இந்தத் தேனீயின் சிறப்பு என்ன என்று தெரியுமா? இது கை எடுக்காமல் ஒரே கோட்டில் வரையப்பட்ட படம். நீங்களும் இதை வரைய முயன்று பாருங்கள்!

# அவற்றைக் கண்டுபிடியுங்கள்!

இந்த இரு படங்களும் பார்ப்பதற்கு ஒன்றுபோல இருந்தாலும்ட இவை எட்டு அம்சங்களில் பொருந்தவில்லை. அந்த அம்சங்கள் யாவை?





# மறைந்துள்ள அபாயம்

இந்தக் குரங்கு ஒய்யாரமாகக் கவலையின்றி இளைப்பாறுகிறது. இதற்கு ஆபத்து ஏற்படுத்தும் சில மிருகங்கள் இங்கு ஒளிந்துள்ளன. அவை என்னென்ன என்று கண்டுபிடியுங்கள், பார்க்கலாம்!

*(விடைகள் 66ம் பக்கத்தில்)*




# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/-
போட்டி முடிவு டிசம்பர் 2002 இதழில் வெளியிடப்படும்.
போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

## வாழ்த்துக்கள்!

ஆகஸ்ட் 2002 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர்:

**வி. ஜெயலட்சுமி,**
C/o. வி. சுரேஷ்,
446, வடக்கு மூன்றாம் வீதி,
புதுக்கோட்டை - 622 001.

பரிசு பெற்ற வாக்கியங்கள்





ஆட்டுவிக்கும் மறைந்த கரங்கள்
ஊக்கமளிக்கும் உதவும் கரங்கள்

கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 64)

## கண்டுபிடியுங்கள்

1. டினோவின் புருவங்கள்
2. டினோவின் புள்ளிகள்
3. டினோவின் கால் விரல்கள்
4. அணிலின் பல்
5. கற்கள்
6. குரங்கின் வாலின் நீளம்
7. மரத்தின் கிளை
8. மரக்கிளையைச் சுற்றியுள்ள குரங்கின் வால்

மறைந்துள்ள அபாயம்



Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

